
கல்கி
KALKI
13.6.1965
35
காசு

# கல்கி
## பொருளடக்கம்

விசுவாவசு வைகாசி 31 — ஜூன் 13



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



# காமராஜரின் திருப்தி!

பதினைந்து மொழி யோசனை

தி.மு.க

பிரச்னையைத் தீர்த்து விட்டேன், பார்த்தீர்களா?





மலர் 24 ○ இதழ் 46

# ஐக்கியத்தை அழிக்கும் திட்டம்

மொழிப் பிரச்னை குறித்துக் காங்கிரஸ் காரியக் கமிட்டி எடுத்துள்ள முடிவை நான் அடியோடு கண்டிக்கிறேன். ஆங்கிலத்தை நீக்கி ஹிந்தி ஏகாதிபத்தியத்தை ஏற்படுத்துவதுதான் உத்தேசம். அது ஒருபுறமிருக்க தேச ஒற்றுமையை பூரணமாகச் சிதைப்பதற்கென்றே வகுத்த திட்டமாகத்தான் இது நடைமுறையில் அமையும்; நிருவாகத்தின் செம்மையை நிர்மூலமாக்கிவிடும். கல்வி, நிருவாகம், தேச ஐக்கியம் இவை யாவற்றுக்கும் திறம்பட உதவும் சாதனமாக ஆங்கில மொழியானது நமது தேசிய வாழ்வில் வளர்ந்து வந்திருக்கிறது. அந்த அரும் பயனுள்ள கருவியை அறியாமைக்கும் பொய்ப் பெருமைக்கும் பலியாக்கியிருக்கிறார்கள். ரோமாபுரி எரியும்போது பிடில் வாசித்துக் கொண்டிருந்த நீரோ போல் நாட்டின் பல தீவிரப் பிரச்னைகளுக்கிடையே அனாவசியமான மொழிப் பிரச்னையை உருவாக்கி யிருக்கிறார்கள். தேசத்தின் பொருளாதாரமும், பாதுகாப்பும் மக்களனைவரின் பூரண கவனத்தையும் பெறவேண்டிய தருணத்தில், பைத்தியக்கார ஹிந்தித் திட்டத்தை அமுல் செய்வதால் பல தீய விளைவுகள் ஏற்பட்டு, தேச ஐக்கியம் சிதையும். உருது, பஞ்சாபி, வங்காளி, தென் இந்திய மொழிகள் இவற்றின் நியாயமான உரிமைகளை மறுத்து ஹிந்தியை அனைவர்மீதும் திணிப்பதற்கே 'மும்மொழித் திட்டம்' என்ற ஒரு மோசடித் திட்டம் தீட்டப்பட்டிருக்கிறது. ஸ்ரீ காமராஜ் அவர்கள் மும்மொழித் திட்டத்திடம் சரணாகதியடைந்துவிட்டார். அதன் மூலம் இரண்டாந்தரப் பிரஜைகளாக்கப்படும் தென்னிந்திய மக்களுக்கு அசட்டுச் சமாதானம் சொல்லி அவர்களை உறங்கச் செய்வதற்குச் சகல விதத்திலும் அவர் முயலுவார்; எனினும் தமிழ் மக்கள் இத் திட்டத்துக்கு அடிபணிய மாட்டார்கள். தி. மு. க.வின் பிரதான ஆயுதத்தைத் தாம் பறித்து உபயோகிப்பதாகவும், எனவே பிரச்னை சௌகரியமாகத் தீர்ந்துவிட்டதென்றும் எண்ணி ஸ்ரீ காமராஜ் திருப்திப்படலாம். ஏனெனில் அவரது மண்டையைக் குடைந்துவரும் ஒரே விஷயம் தி. மு. க.வை எப்படி வெல்லுவது என்பதுதான். ஆனால் தென்னிந்தியாவின் நியாயமான உரிமையையும் நலனையும் காக்க இதுவல்ல வழி.

நாட்டின் பாதுகாப்பே இன்று முக்கியமான பிரச்னை. முறைப்படியும் காலமறிந்தும் அதற்குத் தக்க ஏற்பாடு எதுவும் செய்யவில்லை. ஆட்சியாளரின் மொழித் திட்டத்தை யாரும் ஆட்சேபிக்க முடியாதபடி அடக்கி ஒடுக்குவதற்குப் பாதுகாப்புச் சட்டத்தைப் பிரயோகிப்பதுதான் 'நெருக்கடி'யை ஒட்டிச் சர்க்கார் செய்து வருகிற காரியம். முன்னாள் பம்பாய் பிரதம நீதிபதியும், இன்றைய கல்வி மந்திரியுமான ஸ்ரீ சக்லா அவர்கள் தமது பகுத்தறிவையும், மனசாட்சியையும் பலிபீடத்தில் வைத்து விட்டார். அதற்குப் பதில் தம் பதவியை ராஜிநாமா செய்திருக்க வேண்டும்.

— ராஜாஜி



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா

பாரதியார்

# பொருந்தாத ஒப்புவமை

சர்க்கார் வசூலிக்கும் வரித் தொகை நாட்டின் மொத்த வருமானத்தில் எவ்வளவு சதவிகிதம் என்பதைக் கணக்கிட்டு, இந்த அம்சத்தில் இந்தியாவை வேறு பல நாடுகளுடன் ஒப்பிட்டிருக்கிறார்கள். பிரிட்டனின் மொத்த வருமானத்தில் முப்பத்தைந்து சதவிகிதம் அதன் மொத்தவரி என்றும் அமெரிக்க மக்கள் செலுத்தும் வரி அந்நாட்டின் வருமானத்தில் இருபத்தேழு சதவிகிதம் என்றும், இந்தியாவின் மொத்த வரி தேச வருமானத்தில் பதினொன்று சதவிகிதம் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இதனால் நம் நாட்டின் வரிச்சுமை மற்ற நாடுகளை விடக் குறைவு என்றும் கூறப்பட்டிருக்கிறது.

நாட்டின் மொத்த வருமானத்தை வைத்துக் கணக்குப் போட்டு ஒப்பிட்டுப் பார்ப்பது முறையல்ல. சராசரியில் இந்தியர் ஒருவரின் வருமானம் என்ன என்பதையே வரி விதிக்கும் போது கவனிக்க வேண்டும். அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் சராசரியில் ஒருவன் வருமானம் இந்தியனின் வருமானத்தைவிடப் பல மடங்கு உயர்ந்ததாகும். அவ்வருமானத்தில் கணிசமான சதவிகிதத்தை வரியாகத் தந்தாலும் அந்நாட்டு மக்களால் வரிப் பளுவைத் தாங்க முடியும். இந்தியாவிலோ ஆதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டு வாழ்வதற்கே முடியாமல் மக்கள் தவிக்கிறார்கள். அவர்களுடைய வருமானத்திலிருந்து ஒரு சிறு பகுதியைப் பறித்தாலும் அவர்களால் தாங்க முடியாது. ராஜபவனத்தில் பரிமாறப்படும் ஏராளமான உணவு வகைகளில் பெரும் பகுதியை எடுத்துவிட்டாலும் மீதி உள்ளதே பசி தீர்க்கப் போதுமானதாகும். ராஜபவன விருந்தில் ஒருவர் தாம் உண்ணாமல் கொடுக்கக் கூடிய உணவின் பங்கைக் கணக்கிட்டு, அந்த விகிதத்தில் ஓர் ஏழையின் கால் வயிற்றுக் கூழிலிருந்து பறித்தெடுத்தால் அது முறையாகுமா? கணக்குப்படியும் தர்க்கப்படியும் இது சரியாகுமேயன்றி தருமப்படி ஒரு நாளும் சரியாகாது.

இன்னொரு விஷயத்தையும் கவனிக்கவேண்டும். இந்தியாவில் முக்கால்வாசிக்கு மேற்பட்டவர்கள் ஏழைகள். நடுத்தர வர்க்கத்தினரும், பணக்காரர்களும் மிகக் குறைவே. எனவே பணக்காரர்களுக்கு அதிக வரி விதித்த போதிலும் மொத்த வரி வசூலில் அவர்களுடைய பங்கு குறைவே. ஏழைகள்தான் உண்மையில் வரிப் பளுவைத் தாங்குகிறார்கள். இதனால்தான் நேரடி வரிகளைவிட மறைமுக வரிகளே அதிகமாக உள்ளன. ஏழைகள் அத்தியாவசியமான பண்டங்களுக்கு விலை கொடுத்து வாங்கும் போது தாங்கள் அறியாமலே மறைமுக வரியும் செலுத்துகிறார்கள். ஆரோக்கியமாக வாழ்வதற்கு அத்தியாவசியமான உணவு, உடை, வீட்டு வசதிகள்கூட இல்லாமல் அல்லல்படுகின்ற இவர்களுடைய வருவாயில் பதினொரு சதவிகிதத்தை வரிகள் மூலம் பறிப்பதும் அதற்கு ஒப்புவமை சமாதானம் காட்டுவதும் அநியாயம்.

# விபத்து மயம்!

கடந்த சில நாட்களாகத் தினந்தோறும் செய்தித் தாளைப் பிரித்தாலே விபத்துக்கு மேல் விபத்தாகப் பல கோர சம்பவங்களைப் பற்றிச் செய்திகளைப் படிக்க நேரிட்டிருக்கிறது. பல நகரங்களிலும் கிராமங்களிலும் தீவிபத்துக்கள் உண்டாகி உயிர்ச் சேதமும் பொருட்சேதமும் ஏராளமாக ஏற்பட்டிருக்கின்றன. கடுங் கோடையில் குடிசைகள் தீப்பற்றி எரிவது சர்வ சகஜமாகிவிட்டது. இவ்விதம் நேராமல் காக்க ஏதேனும் வழி உண்டா என்று ஆராயவேண்டும். மேல் நாடுகளில் வீடு கட்டப் பல புதிய பண்டங்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். சில மாதங்களுக்கு முன் ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எளிதில் தீப்பிடிக்காத இத்தகைய ஒரு பொருளைப் பற்றி எழுதியிருந்தார். இனி நம் நாட்டிலும் இதுபோன்ற பொருட்களைப் பயன்படுத்த முடியுமா என்பதில் கிராம — நகர நிர்மாண நிபுணர்கள் கவனம் செலுத்த வேண்டும். தற்போது விபத்துக்கள் ஏற்படாமல் வருமுன் காக்க முடியாவிடினும், விபத்து நேரிட்டவுடனேயே தீயணைப்புப் படையின் உதவி கிடைக்கவாவது வசதிகளைப் பெருக்க வேண்டும். முக்கியமாகக் கோடைக் காலத்தில் தீயணைப்புப் படையைப் பெருக்கி நாட்டின் எல்லாப் பாகங்களுக்கும் விரைவில் [உதவி கிடைக்க வசதி செய்ய வேண்டும்.

தீவிபத்துக்களெல்லாம் போதாதென்று சென்னைத் துறைமுகத்தில் ரசாயன வெடி விபத்தும், தோரியில் சுமார் முந்நூறு உயிர்களைக் குடித்த சுரங்க விபத்தும் நேர்ந்திருக்கின்றன. சுரங்க விபத்தில் நிவாரணப் பணி வேகமாக நடந்து வருவதும், பாதிக்கப்பட்டவர்களுக்குக் கணிசமான உதவி நிதி அளிக்கப்படுவதும் குறிப்பிட வேண்டிய விஷயம். விபத்து நேரிட்டது எதனால் என்பதைப் பற்றி விசாரணையும் ஆராய்ச்சியும் நடக்கவிருக்கிறது. இதுபோல் பல விசாரணைகள் நடந்திருக்கின்றன. தொடக்கத்தில் அவை பற்றிக் கேள்விப்படுகிறோமேயன்றி, விசாரணையின் முடிவு நடைமுறையில் பின்பற்றப்படுகிறதா என்பது தெரிவதில்லை. விபத்தின் பயங்கர நினைவு காலக் கிரமத்தில் மங்கிவிடுவதால் விசாரணையைப் பற்றிய அக்கறையும் நாளாவட்டத்தில் மறைந்துவிடுகிறது. தோரியில் நடந்த பெரும் விபத்துக்குப் பின்னராவது விசாரணையைச் செவ்வனே நடத்தி முடிவு காண்பதோடு அம்முடிவுகளை எல்லாச் சுரங்கங்களும் பின்பற்றுமாறு செய்வதிலும் சர்க்கார் கவனம் செலுத்த வேண்டும்

ஆதிசங்கரர் எழுபத்திரண்டு துர்மதங்களை — தவறான கொள்கைகளை — அழித்து சத்திய தத்துவத்தை நிலைநிறுத்தினர். சத்திய தத்துவமாக விளங்கும் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகளின் எழுபத்திரண்டாவது ஜயந்தி கொண்டாடப்பெறும்போது, நம் உள்ளத்தில் எழும் எண்ணற்ற தவறான எண்ணங்களும், அழுக்காறுகளும் அழியவேண்டுமென அவரது அருளைப் பிரார்த்திப்போமாக!



# பெரும் பேய்த் தேர்

"சோஷலிஸம்" என்றால் சுக வாழ்வுக்கு வேண்டிய வசதிகளையும் பொருட்களையும் சர்க்காரிடமிருந்தே மக்கள் பெறும் ஆட்சி முறை. சர்க்கார் என்றால் என்ன? அது ஒரு மாய சிருஷ்டி; கானல் நீரும் பேய்த் தேரும் போன்றதொரு பொருள். கானல் நீர் என்பது தூரத்திலிருந்து பார்த்தால் ஓர் உருவம் இருப்பதுபோல் காணப்படும்; நெருங்க நெருங்க, உருவம் மறைந்து ஒன்றுமே இருக்காது. சர்க்காரும் இதைப் போன்ற ஒரு பொய்ப் பொருள்.

சர்க்காருக்கு உடல் கிடையாது; உருவம் கிடையாது. சொத்து கிடையாது; வீடும் கிடையாது. ஆயினும், இவை யாவும் இருப்பன போல் மாயத் தோற்றம் மக்கள் மனத்தில் ஏற்படுகிறது.

மக்கள் கொடுக்கும் வரிதான் அதன் சொத்து; மக்கள் கட்டித் தரும் வீடுதான் அதன் வீடு. மக்கள் செலுத்தும் வரிப் பணத்தைக் கொண்டுதான், உத்தியோகஸ்தர்களையும் சேவகர்களையும் நியமித்து அதிகாரம் செலுத்துகிறது. சர்க்காரிடமிருந்து ஏதேனும் ஒரு வசதி பெற்றால், அது ஒரு மான்யம் போல் தோற்றம் தந்தாலும் அதற்காகும் செலவை மக்கள்தான் கொடுக்கிறார்கள். செலவுத் தொகைக்குச் சற்று அதிகமாகவே வரிகள் மூலம் அல்லது விலைவாசிகளின் ஏற்றத்தின் மூலம் மக்கள் தர வேண்டியதாகும். அதில் ஓரளவை இடையில் விரயம் செய்து, மிகுதியிலிருந்து அந்த வசதியைச் சர்க்கார் செய்து தருகிறது. அதாவது நாம் பெறும் வசதிகள், சர்க்கார் மற்றவர்களிடமிருந்து பறித்த பணத்திலிருந்து கிடைத்தவையேயாகும். சர்க்கார் என்பது ஆகாயத்திலிருந்து பண மழை பெய்யும் மேகம் அல்ல. மக்களிடமிருந்து பலாத்காரமாகப் பெற்ற பணமே சர்க்கார் பெய்யும் மழை.

ஒரு நாள் அல்லது ஒரு வருஷம் மட்டும் இம்மாதிரி கொள்ளை நடந்து முடிந்து போகும் என்றால் "தொலையட்டும்" என்று பொறுத்துக் கொள்ளலாம். பணக்காரர்களிடமிருக்கும் செல்வத்தைப் பறித்து ஏழைகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்து நல்ல காரியம் செய்து விட்டார்கள் என்று சந்தோஷமாக இருக்கலாம். அப்படி ஒரு நாள் கொள்ளையோடு முடிவடையாது சோஷலிஸம். அது நிரந்தரமாகத் தினசரி நடைபெற வேண்டிய ஓர் ஆட்சி முறை.

வெளி நாட்டு மக்களை ஏமாற்றியோ, துன்புறுத்தியோ செல்வம் கொண்டு வரும் சர்க்காராக இருந்தால், அது முறையல்லவெனினும் நமது சுயநலத்தை மட்டும் கருதினால் ஒருவிதத்தில் லாபகரமான வியாபாரமே என்று ஒப்புக்கொள்ளலாம். ஆனால் இந்த முறை இனி உலகில் எங்கும் நடைபெற முடியாது. நமக்குள்ளேயேதான் பரஸ்பரம் கொள்ளையும் பங்கிடுதலும் நடத்த வேண்டும். ஆனபடியால் ஆராய வேண்டிய விஷயம் என்னவென்றால் இப்படி மக்களின் செல்வத்தைச் சர்க்காரிடம் வரிகள் மூலம் ஒப்படைத்து அதன் மூலம் எல்லோருக்கும் வசதிகளைச் செய்துதரச் சொல்வது உண்மையில் லாபகரமாக இருக்குமா என்பதுதான்.

இந்த சோஷலிஸ முறையல்லாத மற்றொரு முறை, சர்க்கார் தலையீடின்றி உற்பத்தித் துறையிலும், விநியோகத் துறையிலும், விவசாயத்திலும் மக்கள் போட்டி போட்டு, தத்தம் லாபத்தைக் கருதி நடத்தி, தங்களுக்குத் தேவையான வசதிகளைத் தாங்களே செய்துகொள்ளும் முறையாகும்.

இந்த இரண்டு முறைகளில், அனைவரும் போட்டி போட்டு உற்பத்தி செய்தும் போட்டி போட்டு விற்பனை செய்தும் வருகிற முறை மொத்தத்தில் மக்களுக்கு லாபகரமா அல்லது உற்பத்தி, விநியோகம் எல்லாவற்றையும் சர்க்காரிடம் ஒப்புவித்து விடுவது லாபகரமா? இதுவே கேள்வி.

சர்க்கார் சிப்பந்திச் செலவு விருத்தியாகிக் கொண்டே போவதையும் சர்க்கார் நிர்வாகத்தில் நடைபெறும் நஷ்டம், நாசம், திருட்டு இவற்றையும் நாம் ஐயமறக் கண்டாயிற்று. இந்த விரயத்தில் பங்குபெறும் உத்தியோகஸ்தர்கள் பொருள் உற்பத்தி செய்து கூலி பெறவில்லை. சர்க்கார் என்ற பெரும் புல்லுருவி அமைப்பில் அவர்களும் பங்குதாரர்கள். அவர்கள் ஆபீசுகளில் உட்கார்ந்து ஒரு தொழில் செய்வதுபோல் தோன்றினாலும் அது நாட்டு உற்பத்தியில் பயன்படும் தொழில் அல்ல. இது ஓர் அவசியச் செலவு எனினும் எவ்வளவுக்கு அவசியமோ அவ்வளவோடு கட்டுப்படுத்த வேண்டும். இந்தச் செலவை எவ்வளவுக்குக் குறைக்கிறோமோ, அந்த அளவுக்கு மக்களுக்குச் செல்வம் மிச்சம். மக்களிடம் செல்வம் நின்றால், அது வளர்கிறது. வியாபாரத்திலும், விவசாயத்திலும் முதலீடு செய்வார்கள். நாட்டின் செல்வம் விருத்தியாகும். வரியாகக் கொடுக்கப்பட்டுச் சர்க்கார் காரியாலயங்களுக்காகவும், சிப்பந்திகளுக்காகவும் வரம்பின்றிச் செய்கின்ற செலவு உற்பத்திக்கு உதவாது. அப்படிச் செலவாகும் பணம் செத்த பணம். மூலதனமாகாது.

'சர்க்கார் சிப்பந்திகள் பெருகுவதால் பலருக்கு வேலை கிடைக்கிறதே' என்று எண்ணக் கூடும். ஆனால் அதே செலவைத் தனி மனிதர்கள் தொழில் துறையிலும் விவசாயத்திலும் செலவிடும்போது இன்னும் அதிகமான மக்களுக்கு வேலை கிடைக்கும். அவர்களின் மூலம் தேசத்தின் உற்பத்தியும் பெருகும்.

சோஷலிஸ சர்க்கார் வரிப் பணத்தைக் கொண்டு, தானே வியாபாரத்தையும் உற்பத்தியையும் செய்வதாகச் சொல்லிக் கொண்டு ஓரளவு அவ்வழியில் முயன்று வருகிறது. ஆனால் எவ்வளவு தூரம் லாபகரமாகச் செய்கிறது என்பதை நாம் கண்ணாரக் கண்டு விட்டோம். அக்கறையில்லாத வியாபாரத்திலும் அக்கறை யில்லாத உற்பத்தியிலும் நஷ்டமும் நாசமும்தான் உண்டாகும். வியாபாரமும், உற்பத்தியும், வேளாண்மை

யும் அக்கறையுடன் நடத்தினால்தான் லாபகரமாக நடைபெறும். சர்க்கார் காரியாலயங்களில் இந்த அக்கறைக்கும் உற்சாகத்துக்கும் இடமே கிடையாது. உற்பத்தியின் லாப நஷ்டத்துக்குத் தாங்களே பொறுப்பேற்றால்தான், மக்கள் உற்பத்தி உயர்வில் அக்கறை காட்டுவார்கள். உற்பத்தி பெருகுவதாலோ, குறைவதாலோ பாதிக்கப்படாமல் சம்பளம் பெறுகிறவர்களைக் கொண்டு நடைபெறும் சர்க்கார் ஸ்தாபனங்களால் நாட்டின் பொருளாதாரம் முன்னேற்றம் காணாது.

தான் உழைத்துத் தன் வாழ்க்கையை நடத்துவதை விட்டு, மற்றவர் உழைப்பைக் கொண்டுதான் பிழைக்கலாம் என்பது தான் மொத்தத்தில் சோஷலிஸம். தங்களுக்காக மற்றவர்களை உழைக்கச் செய்வது தனி மனிதர்களால் முடியாது. அதற்குத்தான் சர்க்கார் என்ற பேய்த் தேர் ஒன்றை சிருஷ்டித்துக் கொண்டு பலாத்காரம் செய்து மற்றவர்கள் உழைத்து ஈட்டிய செல்வத்தைப் பறிக்கும் சோஷலிஸ முறை ஏற்பட்டிருக்கிறது.

ஒருவர் அநியாயமாகச் சம்பாதித்த செல்வத்தைப் பறிமுதல் செய்து மக்களுக்குப் பகிர்ந்து கொடுக்க முடிவு செய்தால் அதில் தவறில்லை. ஆனால், பல ஆண்டுகள் நியாயமாக உழைத்து, அந்த உழைப்பினால் பெறும் லாபத்தை உழைத்தவர்கள் அடையவிடாமல் அதைச் சர்க்காரிடம் ஒப்படைக்கச் செய்து, உழைத்தவர்கள், உழைக்காதவர்கள் அனைவருக்கும் பகிர்ந்துகொடுப்பது பொருள் நஷ்டமும் அதருமமுமே அல்லவா? இந்த அதரும முறைதான் சோஷலிஸம்.

இந்த முறையின் விளைவு என்ன? உற்பத்தியில் யாருக்கும் அக்கறை இருக்காது. சேமித்து வைக்கும் பொருளைச் சர்க்கார் பறித்துவிடும் என்பதால் சேமிப்பிலும் அக்கறை யிராது. சேமிப்பு இன்றித் தொழில் எப்படி வளரும்? சோஷலிஸம் வலுக்க வலுக்க ஆரம்பத்திலிருந்த அக்கறை வர வரக் குறைந்து கடைசியில் அடியோடு மறைந்தே போகும். ''நான் ஏன் உழைக்க வேண்டும்? என் உழைப்புக்குரிய லாபம் எனக்குக் கிடைக்கப் போவதில்லை. உழைக்காவிட்டாலும்தான் ஊதியம் உண்டு. எனவே மற்றவர்கள் உழைப்பே போதும்'' என்று எண்ணி ஒவ்வொருவனும் சோம்பேறியாவான். பேய்த் தேரிலிருந்து எல்லாம் அடையலாம்; அதுவே போதும் என்று இருப்பான். மக்களின் மொத்த உழைப்பு குறையும்; அதற்கேற்ப மொத்த உற்பத்தியும் குறைந்து கொண்டே போகும். இதைக் கண்டு சர்க்கார் தலைவர்கள் பலாத்காரமாக மக்களை உழைக்கச் செய்யும் வழியைத் தேடி அதற்கென்று பல ஏற்பாடுகள் செய்தே தீரவேண்டிநேரிடும். அப்படியேசெய்வார்கள். இதுவே அடிமைத் தொழில்முறை. சோஷலிஸத்திலிருந்து அடிமைத் தொழில் முறை கட்டாயம் உண்டாகியே தீரும். அதுவும் லாபகரமாக நடைபெறாது. பலாத்காரமாக நடைபெறும் உழைப்பில் சத்தியமோ, அக்கறையோ, லாபமோ இருக்காது. மேற்பார்வையும், பலாத்காரமும் இருக்குமளவுக்கே மக்கள் மாடுகள் போல் உழைப்பார்கள். சுதந்திர வாழ்வில் சுதந்திரமாக உழைக்கும் மக்கள் தன்வயம் (ஸ்வவசம்) இழந்து கூலிகளாக வேலை செய்து கூலி பெறுவார்கள் — பேய்த் தேரின் மேற்பார்வையில். இந்த வாழ்க்கையே சோஷலிஸத்தின் பூரண அவதாரம்.

அந்தப் பூரண அவதாரம் அடையப் பல படிகள் ஏற வேண்டும். அதுவே சோஷலிஸ பாணி. முடிவு அடிமைத் தொழிலும் கூலி வாழ்க்கையும்.

ஏழைகள் சுக வாழ்வு அடைய வேண்டும் என்பது தருமம். ஆனால் அதற்கு **வழி** இந்த சோஷலிஸமல்ல. தனி மக்களின் தனித் தனி உழைப்பும் போட்டியும் சுதந்திரமாகச் செயல்பட்டு, அப்படிப் போட்டியில் சம்பாதித்த சொத்துக்குச் சர்க்கார் காப்பு அளித்துக் குறைந்த அளவில் வரி வசூல் செய்து உழைப்புக்கு உற்சாகமும் ஊக்கமும் வளர்க்கும் சுதந்திர முறையே ஏழைகளின் சுக வாழ்வுக்கும் முன்னேற்றத்துக்கும் உரிய வழியாகும்.

ஃஃஃ

மைசூர் ராஜ்யத்துக்குள் உணவுப் பொருட்களைக் கட்டுப்பாடின்றி எடுத்துச் செல்லலாம் என்று அந்த ராஜ்ய சர்க்கார் தீர்மானித்திருப்பது நல்லது. ஆனால் அதைப்பற்றி அதிகம் மகிழ்ச்சியடைவதற்கில்லை. ராஜ்யத்துக்கு வெளியிலும் தங்கு தடையின்றி உணவு தானியங்கள் செல்வதற்கு வசதி யிருப்பது அவசியம். வெளி ராஜ்யத்துக்குத் தானியங்கள் போகாமல் தடுப்பது பிரதேசப் பித்தில் பிறந்த சுயநலத்தின் மிகக் கொடிய போக்காகும். மற்ற ராஜ்யங்களில் உணவுத் தட்டுப்பாட்டினால் பெரும் கஷ்டம் விளைந்துள்ளபோது ஒரு ராஜ்யத்துக்குள்ளேயே தானிய உற்பத்தியைக் குறைந்த விலைக்கு விவசாயிகள் விற்கவேண்டுமென நிர்ப்பந்தம் செய்வதில் மகிழ்வதற்கு என்ன இருக்கிறது? பூதேவி ஒருசில இடங்களிலேயே வளம் கொண்டு பயிர்களை வழங்குகிறாள். அவ்வாறு உற்பத்தியாகும் மக்களின் அத்தியாவசியப் பண்டம் நாடு முழுவதிலும் தடையின்றிப் பயனாகாமல் மண்டலக் கட்டுப்பாடு விதிக்கும்போது, ஐக்கியம் என்றும் ஒற்றுமை என்றும் கோஷம் போடுவதில் சிறிதேனும் அர்த்தம் இருக்கிறதா? இந்தியர்கள் யாவரும் ஒரே மக்கள் எனில் இந்தியா முழு

# ராஜாஜியின் கருத்துக்கள்

வதும் உணவுப் பொருட்கள் தடையின்றிச் செல்ல வேண்டாமா? தேவைப்பட்ட பகுதிகளுக்கு உணவை அனுப்பாமல் தடுத்து நிறுத்தி, உள்ளூரில் அதன் விலையைக் குறைக்க முயல்வதைக் 'கொடுமை' என்று கூறுவிடில் 'சிறுபிள்ளைத்தனம்' என்று சொல்ல வேண்டும். தேசத்தின் பாதுகாப்பு இந்திய நாடு முழுவதற்கும் பொதுவான ஒன்று எனில், தேச மக்களுக்கு உணவளிப்பதும் நாட்டுக்குப் பொதுவான ஒரு கடமையாகும்.

தசை வலி

எவ்வளவு கடுமையாயினும்

உபாதை

வலிக்கும் பகுதியில்

மட்டுமே

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

உடலில் ஒரு பகுதியை மட்டும் பாதிக்கும் வலிக்காக உள்ளுக்கு மருந்து சாப்பிடுவானேன்? வலிக்கும் இடத்தின் மேல் மட்டும் அமிர்தாஞ்சனம் தடவி விரைவாக வலி நிவாரணம் அடையுங்கள். பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள அமிர்தாஞ்சனம் தசைவலி, தலைவலி, சுளுக்கு மற்றும் மூட்டு வலிகளுக்கு சிறந்த வகையில் நல்ல நிவாரணமளிக்கும். மற்றும் மார்ப்புச்சளி, ஜலதோஷம் போன்றவைக்கும் ஏற்ற மருந்து அமிர்தாஞ்சனம். ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால், ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக் கணக்கில் வரும்.

அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டுவரும் கைகண்ட நிவாரணி.

பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-டெல்லி




### அத்தியாயம் 9

## கறை படிந்த பணம்

சென்னையில் தங்கப்பன் படித்துக் கொண்டிருக்கையில் மாதம் ஒரு முறை தவறாமல் தாமரை அனுப்பி வைக்கும் 'மணி ஆர்டர்' பணத்தைத் தபால்காரரிடமிருந்து கை நீட்டிப் பெறும்போதெல்லாம் அவனது ஹாஸ்டல் நண்பர்கள் சுற்றிலும் நின்று, "ஸ்.... ஸ்...ஸ்...ஸ்..." என்று காற்றை வாயால் உறிஞ்சுவார்கள். "ஹா ஆ! ஹா ஆ ஆ ஆ !" என்று போலிப் பொறாமையுடன் ஆச்சரியப்படுவார்கள்.

"தங்கப்பா! சினிமாவுக்கு நான் ரெடி!" என்றும், "அதெல்லாம் வேண்டாம்; நம்ம 'கேங்'குக்கு மட்டும் இன்னைக்குக் 'கார்டன் உட்லாண்ட்ஸ்'ஸில் ஒரு 'ஸ்பெஷல் ட்ரீட்' என்றும் கோரிக்கைகளைத் தொடுப்பார்கள். "கொஞ்சம் அதை இப்படிக் கொடுடா, தொட்டுப் பார்த்துட்டுத் தரேன்" என்பான் வேறொருவன். தங்கப்பனின் கைகளைப் பற்றியபடி, "இன்று எங்களை ஹிந்தி வகுப்பிலிருந்து தப்பிக்க வைத்துச் சினிமாவுக்கு அழைத்துச் செல்லப் போகிற தெய்வமே!" என்று குனிந்து ரூபாய் நோட்டுக்களில் தன் கண்களைப் பக்தி சிரத்தையுடன் ஒற்றி எடுப்பான் மற்றும் ஒருவன். "என்ன, தங்கப்பா! ஒசி கும்பல்லே மறுபடியும் சிக்கிக்கிட்டியா?" என்று கிண்டல் ஒலி ஒரு மூலையிலிருந்து கிளம்பும்.

எல்லோருடனும் சேர்ந்து தங்கப்பனும் சிரித்து மழுப்பியபடியே பணத்தைச் சட்டைப் பைக்குள் பத்திரப்படுத்திக் கொள்வான். அதே சமயத்தில், "இப்போது என் மனம் படும் பாட்டை உங்களில் யாரால் உணர முடியும்?" என்றும் துக்கம் நெஞ்சை அடைக்கக் கேட்பான். ஆனால் அது அவர்களுக்குப் புரியவே புரியாது. "ஆமாம், யார் யாரையெல்லாம் சினிமாவுக்கு அழைச்சிக்கிட்டுப் போவது, யார் யாருக்கு டிமிக்கி கொடுப்பது என்று தீர்மானிக்கிறது பெரிய பிரச்னைதான்!" என்று பின்னும் அவர்கள் கேலி செய்வார்கள்.

மாலை கல்லூரி நேரம் முடிந்ததும் தங்கப்பன் அவர்களிடமிருந்து மெல்லத் தப்பித்துக் கொண்டு நடப்பான். ஒரு பஸ்ஸைப் பிடித்துக் கடற்கரைக்கு வந்து சேருவான். சற்று நேரம் மணற்பரப்பில் அமர்ந்து யோசனையில் ஆழ்ந்து போவான். பிறகு மனித சஞ்சாரமே இல்லாத ஏகாந்தமான இடத்துக்குச் செல்ல வேண்டும் என்று அவனுக்குத் தோன்றும். எழுந்து நிலமகளை அணைக்கும் அலைக்கரங்களின் முனையைச் சென்று மிதிப்பான். ஈரம் படிந்ததால் கெட்டிப்பட்டிருக்கும் மணல் பரப்பு மீதாகக் கால் புதையாமல் எளிதாக நடந்து தெற்குத் திக்கில் போவான். சட்டைப் பையில் காலையில் செருகிய பணம் இன்னமும் கனத்துக் கொண்டிருக்கும். தூக்க முடியாத சுமையுடன் போராடுவதுபோல் உள்ளத்துக்குள் தவிப்பான் தங்கப்பன்.

அவனது நண்பர்களில் சிலர் ஏதேனும் மனக் குழப்பம் ஏற்படும்போது சிகரெட் பிடிப்பதென ஆரம்பித்துப் பின்னர் அந்தப் பழக்கத்துக்கு அடிமையாகி விட்டிருப்பதைக் கண்டிருக்கிறான் தங்கப்பன். அந்த முறையைக் கூட அவன் கையாண்டு பார்த்து விட்டான். பலனேதுமில்லை. சேர்ந்தாற்போல் இரண்டு மாதங்கள் நாளைக்கு இரு பாக்கெட்டுகள் என்று ஊதித் தள்ளிய பிறகு அதை வேண்டாம் என்று விட்டு ஒழிப்பதும் அவனுக்குக் கடினமாகவே தோன்றவில்லை. முடியவே முடியாது என்று அடித்துச் சொன்ன தோழர்கள் தோற்றார்கள்; பந்தயம் கட்டியவர்கள் பணம் இழந்தார்கள் !

'சிகரெட் பழக்கத்தை நிறுத்துவதில் எனக்கிருந்த நெஞ்சுறுதிகூட இந்தப் பணத்தைப் பெறும்போது இருப்பதில்லை; மனம் பதறுகிறதே' என்று தன்னைத் தானே நொந்து கொண்டே நடப்பான் தங்கப்பன். மீனவரின் குடிசைகள் இருந்த பகுதியையெல்லாம் தாண்டி அப்பால் செல்வான். அடையாறு நதி கடலில் கலக்கும் முகத்துவாரத்தை அடைவான்.

அங்கு பெரும்பாலும் வெறும் மேட்டுப் பாங்காகத்தான் இருக்கும். நல்ல கனமழை காலத்தில் நதியில் வெள்ளம் மிகும்போது இந்த மணல் மேட்டை வெட்டி விடுவார்கள், ஆற்று நீர் கடலில் போய் விழ வசதியாக. அந்த மணல் மேட்டினையும் தாண்டி அப்பால் 'தியசாபிகல் சொசைட்டி'யின் பின்புறமுள்ள கடற்கரைப் பரப்பினை அடைவான். வெகு அபூர்வமாகவே இந்தப் பகுதிக்கு யாரேனும் வருவார்கள். இன்னும் சில தினங்களில் எலியட்ஸ் பீச் வரையிலும் அதற்கு அப்பாலும்கூட அவன் கால்கள் அவனை இழுத்துச் செல்லும்!

நடந்து நடந்து பாதங்களும் தேகமும் சோர்ந்துபோனால் உள்ளத்தின் வேதனையை மறக்கலாம் என்கிற அவன் ஆசை பொய்த்துப் போகும். திடகாத்திரமான அவனுக்குக் கால்களிலும் வலி எடுக்காது; மனத் துயரமும் தீராது!

'சௌகரியத்துக்கு என்ன குறைச்சல்? எத்தனை பேர்கள் சொத்தைக் கரைச்சுக் குடிச்ச குடும்பம்' என்று கூறியபடி மகேசுவரி அடிவயிற்றில் அடித்துக் கொண்ட காட்சி அவன் எதிரே பூதாகாரமாக விசுவரூபம் எடுத்து நிற்கும். அடுத்தாற்போல், 'உன் அப்பா பலபேர் குடியைக் கெடுத்தவர்' என்று மழலை மாறாத அந்தப் பாலகி உஷா விஷம் போன்ற சொற்களைக் கக்கியதும் நினைவுக்கு வரும். நினைவுக்கு வரவாவது? நினைவிலிருந்து ஒரு கணமேனும் நீங்கினாலல்லவோ நினைவு வந்ததாக அவன் கருத முடியும்?

இடது காலையும் வலது காலையும் மாற்றி மாற்றி இடம் பெயர்த்து வைத்து அவன் நடக்கும்போது மாற்றி மாற்றி மகேசுவரி கூறியதும் உஷா கூறியதும் அவன் நெஞ்சிலே சம்மட்டி கொண்டு பிளப்பதுபோலத் தாக்கும்.



ஒவ்வொரு சமயம் பையிலே கிடந்து மார்பிலே உறுத்திக் கொண்டிருக்கிற இந்த நோட்டுக்களை அப்படியே பொங்கி வரும் கடலலையில் எறிந்து விடலாமா என்றுகூட அவன் யோசித்ததுண்டு. அப்போதெல்லாம் 'துச்சமாக எண்ணி நம்மைத் தூறு செய்த போதினும் அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்பதில்லையே' என்ற பாரதியாரின் வரிகளை அவன் வாய் முணுமுணுக்கும். கூடவே மாருதி கூறிய சொற்களை ஞாபகப் படுத்திக் கொண்டு அவன் புதுத் தெம்பு பெறுவான். 'உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் அச்சமில்லை அச்சமில்லைன்னு வெறுமனே பாடிக்கிட்டு மட்டும் உட்கார்ந்திருந்தால் போதாது; சோம்பேறித்தனம்தான் வளரும். போராடணும்! இழந்துவிட்ட குடும்ப கௌரவத்தை மீண்டும் நிலைநாட்ட உன்னால் முடியும்!'



'எப்படி' என்று கேட்டுக் கொள்வான் தங்கப்பன். 'எவ்வாறு இதைச் சாதிப்பது? தூற்றிய வாய்கள் போற்றும்படியாக என்னத்தைச் செய்வது?'

ஒரு நாள் நீண்ட தூரம் நடந்து திரும்பி அலுத்துச் சலித்துப் போய் இருட்டுகிற நேரத்தில் அடையாறு கடலில் கலக்குமிடத்தின் அருகே வந்து சேர்ந்தான். மாரிக் காலத்தில் வெள்ளம் பெருக்கெடுக்கும்போது மீனவர்கள் ஆற்றை எளிதாகக் கடக்க வசதியாகப் புதிதாக அமைக்கப்பட்டு வந்த நடைபாதைப் பாலத்தின் பக்கத்தில் குவிக்கப்பட்டிருந்த பெரிய மணல் குன்றின்மேல் ஏறி அமர்ந்தான். 'இன்னும் ஒருசில வருஷங்களில் இந்தப் பக்கம் ஒரு நெடுஞ்சாலை மாமல்லபுரம் வரையில் அமைக்கப்பட்டுவிடும். அதற்குள் படிப்பு முடிந்து ஊர் திரும்பி விடுவோமென்றாலும் எப்போதாவது சில தருணங்களில் சென்னைக்கு வர நேர்ந்தாலும் இந்தப் பகுதியில் இந்த அமைதியை அப்போது காண இயலாது! இந்த இடமெல்லாம்கூட கார்களின் போக்குவரத்துச் சத்தமும் ஜனக் கூட்டத்தின் கசமுசவென்ற பேச்சொலியும் 'பட்டாணி! சுண்டல்! கைமுறுக்கு! மிளகு வடை! பொடேடோ சிப்ஸ்!' என்ற கூச்சலும் கேட்க ஆரம்பித்துவிடும். இந்த ஏகாந்தத்தை இப்போதே அநுபவித்தால்தான் உண்டு!' என்று எண்ணியவாறே மணலில் முழங்கைகளை முட்டுக் கொடுத்துச் சாய்ந்து குளுமையான கடற்காற்றைப் பேராசையுடன் நெஞ்சில் நிரப்பினான் தங்கப்பன்.

அவன் பார்த்துக் கொண்டே இருக்கையில் சுற்றிச் சூழ்ந்து வந்த அந்தகாரத்தின் நடுவே கண்ணுக்கெட்டிய தூரம்வரை தெரிந்த கடலலைகளுக்கு அப்பால் ஒரு சிறிய சிவந்த ஒளிப் பிழம்பு புலனாயிற்று.

அதே விநாடியில் ஏதோ ஓர் உன்னதமான திட்டத்துக்கான கருத்து தன் இதயத்தில் வேதனை கலந்த ஒரு சிறு வெடிப்பைப் ஏற்படுத்திக் கொண்டு முளை விடுவது

போன்ற உணர்வும் அவனுக்கு உண்டாயிற்று.

தொடு வானத்தில் அவன் கண்ட ஒளிப் பிழம்பு வளர்ந்தது; கால் வட்ட வடிவம் பெற்றது; கணத்துக்குக் கணம் மேலும் பெரிதாகி வந்தது. தங்கப்பனும் தன் நெஞ்சில் முளைவிட்ட கருத்து ஒரு திட்டவட்டமான வடிவம் பெற்று வளர்வதைக் கண்டான். இரண்டு அல்லது மூன்று நிமிஷங்களுக்குள்ளாக அவன், பௌர்ணமிக்கு மறுதினமான அன்று முழுமதியைக் கண்டான். இலேசாகச் சிவப்பேறிய ஆரஞ்சு வர்ணத்தில் தோன்றிய அது அன்று அவனுக்கு என்றுமில்லாத உற்சாகத்தைக் கொடுத்தது. ஏனெனில், பல பேர்களது குடியைக் கெடுத்துச் சேர்த்ததாகக் கருதப்பட்ட சொத்தைப் பல பேர்களுக்கு வாழ்வளிக்கும் விதத்தில் எவ்விதம் பயன்படுத்துவது என்கிற முறையில் அவன் ஒரு முழுமையான திட்டத்தை வகுத்து விட்டான்!

அந்த விநாடியிலிருந்து தன் மனம் திடுமென இலேசாகிவிட்டதை நிதர்சனமாகக் கண்டான் தங்கப்பன். இந்தப் புதிய பாரமற்ற நிலை அவனுக்குப் பழக்கமாகவே இரண்டொரு தினங்கள் ஆயின! அதன் பிறகு அவன் தனக்கு ஒரு லட்சியத்தையும் ஊக்கத்தையும் உருவாக்கிக் கொடுத்த அந்த இடத்துக்கு அடிக்கடி வரலானான். வெண்மதியைப் பார்த்தவாறே தனது திட்டங்களைப் பல கோணங்களிலும் ஆராய்ந்து விரிவுபடுத்துவான். அலைகடலை நோக்கியவாறே திட்டத்தின் பல படிகளையும் பகுதிகளையும் வகுத்துத் தன் மனத்திலேயே அவற்றுக்கு அழியாத வடிவம் கொடுப்பான். 'கறை படிந்த பணம்' என்று — தன் தாயார் அனுப்பும் பணத்தை இப்போது கருதுவதில்லை; அதைக் கையாளக் கூசுவதில்லை, பலருக்கு நல்வாழ்வு அளிக்க உதவப் போகிற அரிய பொக்கிஷம் அது என மதிக்க ஆரம்பித்தான். அந்த எதிர்கால நலனை அடைய முதற்படியாக இன்று அதனைத் தயக்கமின்றி ஆனால் சிக்கனமாகச் செலவழித்தான்.

இருப்பினும் இன்று — உதகையிலிருந்து சத்தியபுரிக்குச் சென்று கொண்டிருக்கும் இத்தருணத்தில் — இது வரை லட்சியக் கனவுகளாகவே இருந்து வந்த திட்டங்கள் நிறைவேற ஓர் ஆரம்பக் கட்டத்தை அவன் நெருங்கி வந்து கொண்டிருக்கிற சமயத்தில், தங்கப்பனின் உள்ளம் மீண்டும் கனக்கத் தொடங்கி விட்டது !

தன் தாயார் தாமரையிடம், அவள் எதிர்பார்ப்பது போலத் தான் உத்தியோகத்தில் அமரப் போவதில்லை என்றும் தனது லட்சியத் திட்டங்கள் நிறைவேறத் தகப்பனார் விட்டுச் சென்றிருக்கும் நிலபுலன்களையெல்லாம்தான் விற்க அனுமதி தரவேண்டும் என்றும் கூறும்போது அவள் அந்த எப்படி எதிர்ப்பின்றி ஏற்றுக் கொள்வாள் ? அதோடு இன்னும் நீண்ட காலத்துக்குத் திருமணம் பற்றித் தான் சிந்திக்கவே போவதில்லை என்று தீர்மானமாகச் சொல்லுகையில்—அதிலும் அதை முடிவு செய்வதற்காகவே மிகுந்த ஆவலோடு வரும் செல்லத்தையும் அவள் பெற்றோரையும் வைத்துக் கொண்டே அவன் இப்படிப் பேசுகையில் — அங்கு எத்தகைய பயங்கரப் புயல்வீசும்? அந்தக் கோபதாபங்கள், பிரளயமாகச் சொற்பெருக்கெடுக்கக் கூடிய உபதேச மொழிகள், அழுகை, புலம்பல் ஆகியவற்றையெல்லாம் எப்படிச் சமாளிப்பது?

## அத்தியாயம் 10

# பாதம் காட்டிய பரிவு

"ஏன் தம்பி, அந்தப் பெண்ணுக்குக் கால் கொஞ்சம் ஊனமோ ?'' என்று கேட்டான் சொர்ணம்.

அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாது போகவே, ''ஐயே, உன்னைத்தான்!'' என்றான் உரக்க.

''ஊம், உம்!'' — திடுக்கிட்டவனாக, ''என்ன கேட்டீங்க?'' என்றான் தங்கப்பன்.

''அவன் ஏதோ கோட்டையைப் பிடிக்கப் பலமா யோசிச்சுக்கிட்டிருக்கான். ஏன், தொந்தரவு செய்யறே?'' என்றார் சபாபதி.

''ஆமா, நாலு பேர் சேர்ந்த மாதிரியா போறச்சே, கலகலப்பாப் பேசிக்கிட்டு வந்தால் என்னவாம் ? மனக்கோட்டையை எவன் கொள்ளை கொண்டு போயிடப் போறான்? அப்புறம் நிதானமா முற்றுகை போட்டுமே?'' என்று துணிந்து கேட்ட செல்லம் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டாள், கோபமாக.

வாழ்நாள் முழுதும் எண்ணி எண்ணி ஆனந்தப்படக் கூடிய இந்த ரயில் பயணம் அத்தானின் பிடிவாதப் போக்கினால் பாழாகிக் கொண்டிருப்பதாக



# TIARA IS THE PERFECT ENDING TO A BATH

Want to feel utterly, wickedly feminine after a bath? Sprinkle Tiara Lanolin Talc lavishly over yourself. Tiara will give you an aura of misty loveliness...caress you... cover you in a mass of whisper-soft fragrance. ▫ It contains lanolin,nature's own conditioning agent, which protects your skin, prevents chafing. It acts as a deodorant too. Use Tiara regularly. It is the perfect ending to a bath, the perfect beginning to an evening.

J.K. Helene Curtis

SOLE DISTRIBUTORS IN INDIA: **SPENCER & CO. LTD.**
Spencers Building, Forjett Street, Bombay 26 ▫ 153 Mount Road, Madras 2 ▫ 70 Diamond Harbour Road, Kidderpore, Calcutta 23 ▫ 19 A Alipore Road, Delhi 6




AVAILABLE IN TWO SIZES

அவனுக்குத் தாபம். திருமணமான பிறகு கணவனும் மனைவியுமாக எத்தனையோ தடவைகளில் ரயிலில் ஏற வாய்ப்புகள் ஏற்படலாம். இருப்பினும் கல்யாணமாகுமுன்னர் — ஆனால் கல்யாணப் பேச்சுகள் சரளமாக அடிபட்டுக் கொண்டிருக்கும் போது—இதயத்தில் நிலவும் ஒருவித இனம் புரியாத குறுகுறுப்புடன் பிரயாணம் செய்வது போலாகுமா? அத்தானை மிக அருகில் நெருங்கித் தொட்டால்கூடப் பரவாயில்லை என்கிற அளவுக்கு உரிமை பெற்று, ஆனால் நெருங்க முடியாத— அவருடன் தனிமையில்கூடத் தாராளமாக உரையாடுவதை யாரும் தவறாக நினைக்க மாட்டார்கள் என்ற தைரியம் பெற்று, ஆனால் இயல்பாக அவ்விதம் பேச இயலாத — அவர் உள்ளத்தை முழுமையாக, நன்கு புரிந்து கொள்ளும் தகுதி பெற்று, ஆனால் அதற்கான முழு ஆற்றலையும் பெறாத இந்த இரண்டுங்கெட்டான் நிலை அளிக்கும் மோகன இன்பம் இருக்கிறதே— இது இன்னும் எத்தனை நாட்களுக்கு நீடிக்கப் போகிறது? நீடித்த வரையில் அதனை நன்றாக ரசிக்க விரும்பினாள் செல்லம். இளமங்கையர் எல்லாருக்குமே நியாயமாக இருக்கக் கூடிய ஆசைதானே இது? அதைப் புரிந்து கொண்டான் தங்கப்பன். அனுதாபப் படவும் செய்தான்.

"என்ன பேசணும், சொல்லுங்க! நிறையப் பேசறேன்" என்றான் தங்கப்பன் சிரித்துக் கொண்டே.

"ஆமாம், பச்சைப்புள்ளே! என்ன பேசறதுன்னு இவருக்குச் சொல்லித் தரணுமாக்கும்!"

"இந்தா, நீ வாயை மூடிக்கிட்டு இரு" என்று மகளை உடனடியாகக் கடிந்து கொண்டாள் சொர்ணம். "ரொம்பத்தான் துள்ளறே கிடந்து; மட்டு மரியாதை இல்லாமெ!"

செல்லத்துக்குத் திடீரென்று அழுகை பொத்துக் கொண்டு வந்தது. 'தவறுதான்; அடுத்தடுத்து இரண்டு தடவைகளில் அளவுக்கு மீறித்தான் அத்தானை இடித்துக் காட்டுவது போலப் பேசி விட்டோம்' என்பதை அவள் உணர்ந்தாள். அதை அத்தான் எதிரேயே அம்மா கட்டிக்காட்டிக் கடிந்து கொண்டு விட்டாளே என்ற ஆதங்கம், அப்புறம் அத்தான் தன்னைப் பற்றி வாய்த் துடுக்குக்காரி என்று எண்ணி விடுவாரோ என்கிற பயம் எல்லாமாகச் சேர்ந்து அவளை உலுக்கியெடுத்து விட்டன. அவள் ஜன்னல் விளிம்பில் கரங்களைப் பதித்து அவற்றில் முகத்தைப் புதைத்து உடல்குலுங்க மௌனமாக அழத் தொடங்கினாள்.



"அவர் ஏன் உங்களைப் பார்த்தவுடன் அந்த ஓட்டம் ஓடுகிறார்?"

"நான் அடிக்கடி ஜோக் சொல்லுவேன்! ......நில்லுங்கள், நில்லுங்கள். நீங்கள் ஏன் ஓடுகிறீர்கள்?"

அவளைச் சமாதானப்படுத்தப் பெற்றோர் இருவருமே முயலவில்லை. 'கிடக்கட்டும் கழுதை! அழுதால்தான் புத்தி வரும்!' என்பது போல் அவர்கள் உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் தங்கப்பனுக்கு இதயம் இளகியது. ஏதேனும் அவளுக்கு ஆறுதலாகக் கூறத் துடித்தான். ஆனால் பெற்றோரே அவளை லட்சியம் செய்யாத போது தான் என்ன சொல்வது என்று அவனுக்கு விளங்கவில்லை. "நீங்க என்ன கேட்டீங்க அத்தை?" என்றுதான் வினவ முடிந்தது அவனால்.

"அந்தப் பெண்ணுக்குக் கால் ஊனமோ?" என்றேன். "கொஞ்சம் நொண்டி நொண்டி நடந்தாப்பலே இருந்திச்சு; அதனாலே அப்படித் தோணிச்சு."

தங்கப்பனுக்குப் பளிச்சென்று ஒரு விஷயம் புலனாயிற்று. தான் பொழுது போக்காகச் சரளமாகப் பேசாமல் சிந்தனையில் ஆழ்ந்திருந்ததைத் தாயும் மகளும் பெண்களுக்கே உரித்தான சுபாவத்துடன் வேறு விதமாக எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்! 'நான் உஷாவைப் பற்றித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்றெண்ணி விட்டார்கள்! அதனால் கலவரமடைந்த சொர்ணத்தின் உள்ளம் உஷாவுக்குக் கால் உண்மையிலேயே ஊனமடைந்திருக்கக் கூடாதா என்றுகூட நப்பாசைப்படுகிறது! செல்லமும் தனக்குப் போட்டியாக இன்னொருத்தி அத்தானின் சிந்தனையை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறாளோ என்ற சந்தேகத்தின் பேரில் எழுந்த பொறுமையால்தான் சற்றுத் தேவைக்கு அதிகமாகவே பேசி விட்டாள்!'

"சேச்சே! அதெல்லாம் ஒன்றுமில்லே, அத்தை!" என்றான் தங்கப்பன். "கீழே விழுந்த போது எங்கேயாவது கொஞ்சம் நரம்பு பிசகிவிட்டிருக்கும், அவ்வளவுதான்" என்றான். கூடவே, "அப்பா! காலை நகர்த்த இங்கே

இடமில்லே; மரத்துப் போகிறது !'' என்றவாறே காலடியில் ஏராளமாகக் குவிந்து கிடந்த பெட்டி, படுக்கை, கூடை போன்ற சாமான்களுக்கிடையிலிருந்து மெல்ல வலது காலே மட்டும் விடுவித்து உயர்த்தி, இடது துடை மீது வைத்துக் கொண்டு பூட்ஸைக் கழற்றிக் கீழே போட்டான். 'ஸாக்ஸ்' மட்டும் இப்போது அணிந்திருந்த பாதத்தையும் உள்ளங் காலேயும் விருவிருவென்று மஸாஜ் செய்வது போல் பிசைந்து விட்டுப் பிறகு கீழே தாழ்த்திய போது அவனது உள்ளங்கால் செல்லத்தின் பாதத்தின் மீது பதிந்தது ! அது மட்டுமா? குதிகால் தரையில் அழுந்தியிருக்கப் பாதத்தின் முன்புறம் உயர்ந்தும் தாழ்ந்தும் அவளுடைய மருதாணியிட்ட கால் விரல்களே இலேசாகத் தட்டிக் கொடுக்கவும் செய்தது !

அழுகையில் குலுங்கிக் கொண்டிருந்த அவள் தேகம் துணுக்குறுவதையும், விறைத்துக் கொள்வதையும், பிறகு சிலிர்ப்பதையும், அப்புறம் தளர்வதையும் அடுத்தடுத்து அவனுல் காண முடிந்தது. முதலில் புடவைத் தலேப்பால், கவிழ்ந்திருந்த தன் முகத்தைத் துடைத்து அழுகையின் சாயலேயெல்லாம் அழித்து விட்டுப் பிறகு தான் மெல்லத் தலே நிமிர்ந்தாள் அவள். புன்னகை பூத்த வதனத்தில் அவனுடைய பாதம் அறிவுறுத்திய பரிவைப் புரிந்து கொண்டு நன்றி செலுத்துவதற்கான அடையாளக் குறியாக ஒரே ஒரு கண்ணீர் முத்து மட்டிலும் இடது கண்ணோரத்தில் கீழே விழலாமா வேண்டாமா என்று யோசித்தபடி நின்று கொண்டிருப்பதைக் கண்டான் தங்கப்பன். அத்தனே அவள் பார்த்த பார்வை, 'கனிவு காண்பித்தால் மட்டும் போதாது! என் இதயத்தை உங்கள் காலடியில் சமர்ப்பிக்கிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்' என்பது போலிருந்தது. தங்கப்பன் திகைத்தான்.

அந்தத் திகைப்பு நீங்குமுன்னர் தவறிப் போய் அத்தான் மீது தன் கால் பட்டுவிட்டது போல் பாவனே செய்து, அதைச் சாக்கிட்டு விருட்டெனக் கீழே குனிந்து அவன் பாதங்களே அழுத்தித் தொட்டுத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள் செல்லம்.

விம்மிதமடைந்து போனுன் தங்கப்பன். 'இத்தனே தூரம் நம்மிடம் காதல் கொண்டிருக்கும் இந்தப் பெண்ணே நிராகரிப்பது போல் பேசத் தனக்கு எப்படித் துணிவு வரப் போகிறது ?' என்று எண்ணிய போது அவனுக்குத் தலே சுற்றுவது போலிருந்தது !

**(தொடரும்)**

---



## பெண் உரிமை!



★ பிரெஞ்சுக் கதைகளேயும், நாவல்களேயும் படிக்கும்போதும் அவர்களது நாடகங்கள், சினிமாப் படங்களேப் பார்க்கும்போதும் அந்தத் தேச ஸ்திரீகளுக்கு அளவற்ற உரிமை உண்டு, அவர்கள் இஷ்டப்படி எதுவேண்டுமானுலும் செய்யலாம் என்று எண்ணத் தோன்றும்.

ஆனல் சட்டப்படி அவர்களுக்கு அதிக உரிமை கிடையாது. ஒரு பிரெஞ்சு ஸ்திரீ தன் புருஷன் அனுமதியின்றிப் பாங்கில் கணக்கு வைத்துக்கொள்ளக் கூடாது. அவள் உத்தியோகம் பார்க்கவோ, அல்லது குடியிருக்கும் இடத்தைப் பற்றித் தீர்மானிக்கவோகூட அவளுக்கு உரிமை கிடையாது. நெப்போலியன் காலத்தில் ஏற்பட்டிருந்த இந்தத் தடைகளே நீக்க இப்போதுதான் பிரெஞ்சு அரசாங்கம் ஒரு புதிய சட்டம் கொண்டுவரத் தீர்மானித்திருக்கிறது!

★ ராஜ்ய சபையில் ஸ்ரீமதி சாரதா பார்கவா என்ற அங்கத்தினர், மணப்பெண்ணுக்கும் மணமகனுக்குமிடையே வயது வித்தியாசம் பதினேந்துக்குமேல் இருக்கக் கூடாது என்று சட்டம் இயற்றுவதற்கான ஒரு மசோதா கொண்டு வந்தார் சிறிது காலத்துக்கு முன்.

இந்த வயதுச் சட்டக் கணக்குகள் பெண்களுக்குப் பல தொல்லைகளே விளைவித்து வந்து கொண்டிருக்கின்றன. பெண்கள் இனி நான்கு ஜாதகங்கள் தயாராய் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். ஒன்று பள்ளிக்கூடத்தில் சேருவதற்கு; இன்னொன்று அரசாங்க உத்தியோகம் பார்ப்பதற்கு; மூன்றாவது கம்பெனி உத்தியோகங்கள் பார்ப்பதற்கு. ஏனென்றால், கம்பெனிகள் 35 வயதுக்குட்பட்டவர்களே விண்ணப்பம் செய்துகொள்ளலாம் என்று விளம்பரம் செய்கின்றன. நான்காவது கல்யாணம் செய்து கொள்வதற்காக!

★ அதென்னமோ 'சாரதா'க்களுக்கும் ஸ்திரீகள் சமூக சீர்திருத்தத்துக்கும் அதிகம் தொடர்பு இருந்து வந்திருக்கிறது. பெண்களின் கல்யாண வயது 15க்குக் குறைவாக இருக்கக் கூடாதென்று 'சாரதா சட்டம்' சம்பந்தப்பட்ட மசோதாவைக் கொண்டு வந்தது ஹரிவிலாஸ் சாரதா. கடும் வைதீகர்கள் சிலர் அந்த மசோதாவை ஒரு ஸ்திரீயைத் திட்டும் முறையில் திட்டிக்காக்கும் முறையில் காத்தனர், அவர் ஒரு ஸ்திரீ என்று தவருக எண்ணிக் கொண்டு. ஆனல் அவர் ஓர் ஆண்பிள்ளை!

# சிரஞ்சீவிக் கதைகள்...

2. துஷ்யந்தன் — சகுந்தலை



கானகம் எங்கும் அமைதி. தவழும் தென்றலின் மெல்லிய கீதம் இடையிடையே ஒலித்துக் கொண்டிருந்தது.. திடீரெனத் துள்ளிப் பாய்ந்தது ஒரு புள்ளிமான்.



துவளும் அதன் உடலிலே பரபரப்பு. காதுகள் குத்திட்டு நின்றன. மிரண்டு பின்னோக்கிய அதன் பார்வையிலே ஓடிவரும் ரதம் பட்டது.



குதிரைகளின் குளம்பொலியும், ரதத்தின் ராட்சசச் சக்கரங்கள் உருண்டோடிவரும் ஓசையும் கானக அமைதியூடே எழுந்து எதிரொலித்தன. ரதத்தில் ஓர் வில்லேந்திய வீரன் வீற்றிருந்தான்.



அவ் வீரன்தான் துஷ்யந்தன். புரு வம்சத்து அரசன். மிரண்டோடும் மானைக் குறிபார்த்து அவனது நாணேற்றிய வில் வளைந்தது. மானுக்கு ஓடிவந்த களைப்பு; தயங்கித் தள்ளாடியது.



துஷ்யந்தனது அம்பு பாய்வதற்கு முன்பாக, கணவ முனிவரது சீடர்கள் அங்கு தோன்றி இடைமறித்து, மான் முனிவரது ஆசிரமத்தைச் சேர்ந்தது, மானைக் கொல்ல வேண்டாம் என அரசனை வேண்டினர். சீடர்களது வேண்டுகோளுக்கு துஷ்யந்தன் இணங்கினான்.



இந்தக் கானகத்தில்தான் துஷ்யந்தன் அழகு வடிவான சகுந்தலையை — எதிர்காலத்தில் அவனது மனைவியாக ஆக இருந்தவளை — சந்தித்தான்.



# பேசும் தெய்வம்

**பி.டி.ராஜன்**

**கா**ஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகளின் பல்வேறு சிறப்புக்களைப் பற்றிப் பல வகையில் பேசலாம். சிலர் அவர்களுடைய தூய்மை, தவ வலிமையைப் பற்றியும்; வேறு சிலர் மறை, மறைவழி வந்த அறங்கள் இவைகளை வளர்க்க அவர்கள் செய்யும் விடா முயற்சியைப் பற்றியும்; இன்னும் சிலர் மடாதிபதி என்ற சம்பிரதாயப் பெருமையை ஒதுக்கித் தள்ளி எல்லோருடனும் எளிதாகப் பழகும் அவர்களுடைய இனிமையைப் பற்றியும்; மற்றும் சிலர் தமக்கு மட்டும் மோட்சத்தைத் தேடிக் கொள்ளாமல் எல்லோரும் உய்யும் வண்ணம் அவர்கள் சாதி, சமய வேறுபாடின்றிச் செய்து வரும் தெய்விகத் தொண்டைப் பற்றியும் கூறலாம். இதுவன்றி சுவாமிகள் பொதுவாக நம் தேசத்திலும் குறிப்பாகத் தென்னகத்திலும் ஆத்திகம் தழைக்க வழி வகுக்கும் வகையில் நடத்தி வரும் திருப்பாவை, திருவெம்பாவை இயக்கம், மருத்துவ மனைகளில் நோயுற்றோருக்கும், சிறைச்சாலைகளில் இருக்கும் கைதிகளுக்கும் டாக்டர்களும் சிறை அதிகாரிகளும் வியக்கும் வண்ணம் மனச்சாந்தி மூலம் சிகிச்சையும் நல்வழியும் கிட்டுமாறு நடத்தும் இயக்கங்களின் ஏற்றத்தைப் புகழ்ந்து பேசலாம். ஆனால் சுவாமிகளுடன் தொடர்பு கொண்டவர்கள் தாங்கள் அனுபவித்த அவரது மானுடப் பண்பையும் அன்பையும் எளிமையையும் பற்றிப் பேசுவதே அவர்களின் பெருமையை வெளியிட மிகச் சிறந்த வழி என்ற கருத்தின் பேரில், சுவாமிகளின் எழுபத்திரண்டாவது பிறந்த நன்னாளை யொட்டி எனக்கு அவர்பால் ஏற்பட்ட தொடர்பைப் பற்றிச் சில வார்த்தைகள் எழுதுகிறேன்.

**சு**வாமிகளை முதன் முதலாக 1931ம் ஆண்டில் சந்திக்கும்வாய்ப்பு எனக்குக் கிட்டியது. பல அரசியல் அலுவல்களுக்கிடையே காலம் சென்றமையால் சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னரே மீண்டும் தரிசனம் செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. மடத்தின் சம்பிரதாயங்களைப் புறக்கணித்து சுவாமிகள் தருமபுர ஆதீனத்துக்கு விஜயம் செய்த பொழுது ஸ்ரீலஸ்ரீ ஆதீனகர்த்தர் அவர்கள் என்னை சுவாமிகளுக்கு அறிமுகப்படுத்த முற்பட்டார்கள். அப்பொழுது சுவாமிகள் தமக்கு அறிமுகம் தேவையில்லை என்றும் 1931ம் ஆண்டில் என்னைச் சந்தித்திருப்பதாகவும் கூறினார்கள். சுவாமிகளின் அபார ஞாபக சக்தி அப்பொழுது எனக்குத் தெளிவாயிற்று.

**ம**துரை மீனாட்சிஅம்மன் கோயில் திருப்பணிக் குழுவுக்கு நான் தலைமை ஏற்றவுடன் திருவானைக்காவுக்குச் சென்று சுவாமிகளைத் தரிசனம் செய்துவிட்டு மதுரைக்கு வந்து திருப்பணியைத் தொடங்கி வைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டேன். அப்போது சுவாமிகள் தாம் கால் நடையாக வரவேண்டியபடியால் போதுமான அவகாசம் இல்லை என்றும், வண்டியிலோ மோட்டாரிலோ சென்றால் சில இம்சை நேரிடும் என்றும், மேனாவில் வருவதால் அவ்வளவு தூரம் தம்மை ஆட்கள் சுமந்து செல்வதைத் தாம் விரும்பவில்லை என்றும் கூறினார்கள். சுவாமிகளைக் குறுகிய காலத்தில் அத்தனை தூரம் நடந்து வரும்படி செய்ய மனமில்லாமல் நான், 'தங்கள் ஆசி இருந்தால்



16—5—65 அன்று காஞ்சி காமகோடி ஆசார்ய ஸ்வாமிகளின் எழுபத்திரண்டாவது பிறந்த தினத்தையொட்டி ஸ்ரீ பெரியவர்களுக்குப் புதுப் பெரியவர்கள் தீர்த்தங்களை அபிஷேகம் செய்தது பக்தர்களுக்கு மெய்சிலிர்க்கும் காட்சியாக இருந்தது.

போதும்' என்று கேட்க அவர்களும் மன முவந்து ஆசியளித்து அனுப்பினார்கள். அவ்வாசியானது எனக்கும் என் சகாக்களுக்கும் எல்லையற்ற ஊக்கத்தை அளித்ததுமன்றி நாங்கள் மேற்கொண்ட மாபெரும் கைங்கரியம் வெற்றிகரமாக நடந்தேறும் என்ற திடநம்பிக்கையையும் ஊட்டியது.

மதுரைக் கோயில் திருப்பணி தொடங்கிய சில நாட்களிலேயே ஸ்வாமிகள் மதுரைக்கு ஐம்பது மைல் தூரத்திலிருக்கும் இளையாத்தங்குடிக்கு எழுந்தருளினார்கள். அங்கு சுமார் இரண்டு வருட காலம் தங்கினார்கள். அப்பொழுது அடிக்கடி அங்கு சென்று ஸ்வாமிகளைத் தரிசித்து, திருப்பணியில் ஏற்படும் சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்வது எனக்குப் பழக்கமாகி விட்டது. பல சந்தேகங்களும் சஞ்சலங்களும் ஸ்வாமிகளைப் பார்த்தவுடனேயே தாமாக நீங்கி மனச்சாந்தியும் ஊக்கமும் கிடைத்து விடும். திருப்பணிக் காரியங்களை எப்படிச் செய்வது என்பதில் எனக்குப் பற்பல அரிய யோசனைகளை ஸ்வாமிகள் அளித்தார்கள்.

உதாரணமாக, திருப்பணிக் குழு அங்கத்தினர் ஒவ்வொருவரும் என்னால் குறிப்பிடப்பட்ட ஒரு தொகையை வழங்க வேண்டும் என்றும் அதைக் கொண்டு திருப்பணிக் குழுவின் ஞாபகார்த்தமாக ஒரு நிரந்தரமான கைங்கரியம் செய்ய வேண்டுமென்றும் திட்டமிட்டோம். பலர் பலவிதமான அபிப்பிராயங்களைச் சொன்னார்கள். ஒருவர் திருச்சியில் அகிலாண்டேசுவரி அம்மனுக்குச் செய்திருப்பது போல் தாடங்கம்





செய்து சமர்ப்பிக்க வேண்டும் என்றார். சுவாமிகளைக் கேட்டதில் அவர்கள் 'மீனாட்சி அம்மனுக்கு உகந்தது மூக்குத்தி ஆபரணம் தான். அதைச் செய்து போடுங்கள்' என்று சொன்னார்கள். எல்லோரும் இந்த முடிவை மிகப்பொருத்தமானது என்று ஒப்புக் கொண்டார்கள். இது எவ்வளவு சரியான யோசனை என்பதை அதன் பின் அம்பிகையைத் தரிசித்த பக்தர்கள் அறிவார்கள்.

இரண்டொரு தடவை நான் முன்னதாகவே ஆளை அனுப்பி, 'எப்போது வந்தால் சுவாமிகளுக்குச் சௌகரியமாக இருக்கும்?' என்று கேட்டு வரச் சொன்னேன். சுவாமிகள் நான் எப்போது வேண்டுமானாலும் அவரிடம் வரலாமென்று சொன்னதுமல்லாமல் நான் வந்தவுடன் தாம் என்ன வேலையாக இருந்த போதிலும் தம்மிடம் வந்து சொல்லும்படி மடத்து அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார்கள். என்னை ஒரு நிமிடமும் தாமதிக்கும்படி விடக் கூடாது என்ற எண்ணம் போதும்! என்னே கருணை !

சுவாமிகள் என்னிடம் காட்டிய இந்த அருள் காரணமாக நான் அடிக்கடி சுவாமிகளைப் பார்த்து வந்தேன். அச்சமயங்களிலெல்லாம் எனக்குப் பல விதங்களில் கஷ்ட நிவாரணமும் மன நிறைவும் ஏற்பட்டன. மலைப்புத் தட்டச் செய்யும் மகத்தான திருப்பணி வேலைகளும் குறிப்பிட்ட காலத்துக்கு முன்னதாகவே செவ்வனே முடிவடைந்ததற்கு சுவாமிகளின் ஆசியே காரணமென நம்புகிறேன்.

நான் சுவாமிகளிடம் சென்று திருப்பணியைத் தொடங்கி வைக்க அவரால் வரமுடியா விட்டாலும் கும்பாபிஷேகத்துக்கு அவர்கள் அவசியம் வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டேன். அதற்குள் அவர்கள் மதுரையிலிருந்து வெகு தூரம் தள்ளிப் போய்விடக் கூடாதென்றும், அப்படிப் போனால் பல்லக்கை உபயோகிக்க வேண்டுமென்றும், நடக்கக் கூடாது என்றும் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டேன். அவர் மனத்தில் என்ன உத்தேசம் இருந்திருக்குமோ? எனினும், நான் உரிமையுடன் கூறுவதைக் கருணையுடன் கேட்டுக் கொள்வார். 'எப்படியாகிலும் கும்பாபிஷேகத்துக்கு அவசியம் வருகிறேன்' என்று ஒப்புக் கொண்டார்கள்.

இடையே தஞ்சையில் பங்காரு காமாட்சியம்மன் கோவில் கும்பாபிஷேகத்துக்கு சுவாமிகள் விஜயம் செய்துவிட்டு ராமேசுவரத்தில் தாம் நிர்மாணித்து வந்த சங்கர மடத்தைப் பார்க்கக் கால் நடையாகவே சென்று விட்டார்கள். நான் அவ்விடம் சென்று கும்பாபிஷேகத் தேதியைத் தெரிவித்து, மேனாவில்தான் வரவேண்டும் என்றும், அவ்வளவு தூரம் கால்நடையாக வரக்கூடாதென்றும் வற்புறுத்தினேன். சுவாமிகள் 'மீனாட்சி எனக்கு நடக்கச் சக்தியளித்திருக்கும் போது நீ ஏன் கவலைப்படுகிறாய்?' என்று கேட்டார்கள். தமக்குள்ள சக்தியெல்லாம் தெய்வப்பிரசாதமே என்று கூறும் சுவாமிகளின் எளிமையை வியந்து கொண்டேன். எனினும் அம்பிகையை ஆதாரம் காட்டித் தாம் தொலை தூரம் நடந்தே வருவதை ஏற்கச் சொல்கிறாரே என்று நினைத்து வருந்தினேன். 'மீனாட்சியம்மையும் தங்களோடு சேர்ந்து விட்டாற் போலிருக்கிறதே!' என்றேன். சுவாமிகள் சிரித்துக் கொண்டு 'ஏன்? அதனால் உனக்கு வருத்தம் உண்டா?' என்று கேட்டார்கள். மீனாட்சியம்மன் சுவாமிகளுக்கு வலிமை கொடுப்பதற்கு வருத்தப்படவில்லை என்றும், அவர்கள் அவ்வளவு தூரம் கால்நடையாக வருவதைத்தான் என் மனம் ஏற்கவில்லை என்றும் கூறினேன். சுவாமிகள் பல்லக்கில் வந்தால் அநேக மக்கள் சுவாமிகளைத் தரிசிக்கும் வாய்ப்பு இருக்குமென்றும் சுவாமிகளுக்கும் சிரமம் ஏற்படாதென்றும் கூறினேன்.

ஆனால் தேக கஷ்டத்தை ஒருபோதும் நாடாத சுவாமிகள் கால் நடையாகவே கும்பாபிஷேகத்துக்கு இரண்டு நாட்கள் முன்னதாக இளைய சுவாமிகளுடன் மதுரைக்கு வந்து சேர்ந்தார். மக்களுக்கெல்லாம் மட்டற்ற மகிழ்ச்சி. எல்லையற்ற உற்சாகம். கும்பாபிஷேகத்துக்கு எதிர்பார்த்தபடி ராஷ்டிரபதி அவர்கள் வர முடியாமற் போன குறையை சுவாமிகளின் விஜயம் பூர்த்தி செய்துவிட்டது.

தற்செயலாகக் கும்பாபிஷேகத்தைப் பார்க்க வந்த அமெரிக்க ஐக்கிய நாட்டுத் தூதர் ஷ்ப்ராங்க்ளின் அவர்கள் வெளியிட்ட அறிக்கையில் கும்பாபிஷேகத்தைப் பற்றிப் பொதுவாகவும் அதில் சிகரம் வைத்ததுபோல் சுவாமிகள் பங்குகொண்டதைப் பற்றிச் சிறப்பாகவும் எழுதியுள்ளார்.

'சாதுர்மாஸியம்' என்னும் விரதம் காரணமாக ஏறக்குறைய இரண்டு மாதகாலம் மதுரைக்கு அருகில் சுவாமிகள் தங்கும் பேறு அம்மாநகருக்குக் கிட்டியது. சுவாமிகள் முந்தைய ஆண்டில் இளையாத்தங்குடியில் நடத்தியது போலவே மதுரையிலும் மக்கள் முன்னெப்போதும் கண்டிராத வகையில் நம் நாட்டின் பல்வேறு பாகங்களிலிருந்தும் பிற நாடுகளிலிருந்தும் திறமை கொண்ட புலவர்களையும் கலைஞர்களையும் தருவித்துப் புராதனக் கலைகளுக்குப் புத்துயிர் அளிக்கும் வகையில் பாரத, சில்ப, ஆகம சதஸ் நடத்தினார்கள். பாமர மக்களின் மனத்தில் மதப் பற்றையும் தெய்வ பக்தியையும் பசுமரத்தாணிபோல் பதியும்படி செய்தார்கள். மதுரை மாநாட்டில் சிறப்பாக எல்லா ஆலய இறைபணியாளர்களையும் வரவழைத்து அவர்களுக்கு வேண்டிய நல்லுபதேசங்களையும் ஆலயங்களைப் பேணிப் பாதுகாக்க வேண்டிய முறைகளையும் கற்பித்தார்கள்.

பொதுவாக நம் நாட்டையும் குறிப்பாகத் தென்னகத்தையும் தெய்விக வாழ்க்கையில் நடத்தி வரும் நம் சுவாமிகளைப் பேசும் தெய்வம் என்றே கருதுகிறோம். சுவாமிகள் பல்லாண்டு நம்மிடையே வாழ்ந்து நம்மை நல்வழிப்படுத்த வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போமாக.

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது




மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்! ஒரு முறை வெள்ளோட்டம் பார்த்தீர்களானால் வெட்டவெளிச்சமாகத் தெரியும் அதன் மேன்மை! உண்மை, சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி. சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை... தூய்மை ஓங்க வெளுத்து, ஒளி கிரக்க உதவும்! உங்கள் துணிகள் அனைத்துக்கும் உபயோகியுங்கள்: மேம்பாடடைந்த புதிய ஸன்லைட் சோப்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது**

**மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்**

லிண்டாஸ்-S.58-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

# சொல்லும் செயலும்

சாமா



"ஆபத்துச் சமயத்தில் பிற உயிர்களைக் காப்பாற்றுவதே தீரத்தனம். நெருப்பென்றும் நீரென்றும் பார்க்கமாட்டேன்!" என்றான் பாலு பெருமையாக.




"போடா! என் தீரத்தைப்பற்றி உனக்குத் தெரியாது!" என்று மார் தட்டினான் முத்து. இப்படி இவ்விரு வாய்ச்சொல் வீரர்களும் பேசிக்கொண்டிருக்கையில் குமார் எதையோ சுட்டிக் காட்டினான்.




திடீரென்று நீரில் குதித்தபடியே, "பாவம்! மான் நீரில் தவிக்கிறது. காப்பாற்றுகிறேன்!" என்று நீச்சலடித்தான் குமார். நண்பர்கள் நீரின் வேகத்தைப்பற்றி எச்சரித்தனர்.




அவர்கள் எச்சரிக்கையைப் பொருட்படுத்தாமல், மிதக்கும் மானின் கொம்பைப் பற்றிக்கொண்டு கரைக்கு நீந்தி வந்து சேர்ந்தான் குமார்.




கரையில் குமார் வந்து சேர்ந்த பிறகுதான் அது மான் இல்லை, மரக்கட்டை என்பது தெளிவாயிற்று. நண்பர்கள் அவனைக் கேலி செய்தார்கள்.




ஆனால் குமார் உண்மையாகவே சில உயிர்களைக் காப்பாற்றி விட்டான் என்பதை அந்த மரக்கட்டையிலிருந்துவெளிவந்த எலிக் குஞ்சுகள் நிரூபித்தன.

காலம் பறக்கிறது...ஆயினும் அவள் எழில் நிலைக்கிறது



கண்டான். கண்டதும்
மையல் கொண்டான். அவளு
டைய பேரெழில் அவனை மயக்கிற்று.
காதல் கடிமணம் நடந்தது. ஆண்டுகள்
இருபது ஆகிவிட்டன. ஆனுலென்ன? அன்று
முதல் தடவையாக அவளைக் கண்ட காட்சி அவன்
நினைவில் பசுமையாக நிலைத்துவிட்டது. அவள்
எழிலோ இன்னும் ஒளி குன்ருது சுடர் விடுகிறது. தன்
நாயகன் போற்றும் தனது அழகுப் பராமரிப்புக்கு
அவள் உபயோகிப்பது "'ஹேஸலின்' ஸ்னோ"...
தனியாகவோ, பவுடர் படியும் தளமாகவோ எழிலுக்கு
மெருகூட்டிப் பாதுகாக்கிறது "'ஹேஸலின்' ஸ்னோ".

# 'ஹேஸலின்' ஸ்னோ

உங்களுக்கு எழிலூட்டுகிறது.

'ஹேஸலின்' வரிசையில் மேலும் கிடைப்பவை கோல்ட் க்ரீம், டால்கம்



பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி
(இந்தியா) ப்ரைவேட் லிட்.
த. பெ. நெ. 290, பம்பாய்-1.








"....தமிழகத்தில் ஜோதி வடிவாக விளங்கிய இராமலிங்கர், வடக்கில் காந்தி வடிவிலே காட்சியளித்தார் என்று சொல்லலாம்" என்று ம. பொ. சி. அவர்கள் வள்ளலாரைப் பற்றிய தமது நூலில் கூறியுள்ளார்.

தமக்கு விருப்பமில்லாமலே மணம் செய்விக்கப்பட்ட மனைவியுடன் இருந்த முதல் இரவன்று வள்ளலார் தாம் பெரிதும் ஈடுபட்டிருந்த திருவாசகத்தையே படித்துக் கொண்டிருந்தார். அவரது இல்வாழ்க்கை தொடக்கத்திலேயே பூர்த்தியும் பெற்றது.

அவர் உடலோடு உருக்கரந்த உத்தம புருஷர் என்ற வரலாற்று உண்மையையும், அருட்பெருஞ் ஜோதி தனிப் பெருங் கருணை என்ற அவரது அருள் வாக்கையும் நோக்குமிடத்து அம்பலக் கூத்தனின் திருக்கரத்தில் இலங்கும் அணையாத ஜோதியில் கலந்தார் என்றே கூறலாம். இக்கருத்துக்களை வைத்து ஓவியர் வினு இவ்விதம் அட்டையிலும் இவ்விரு பக்கங்களிலும் கனிவுறு காட்சிகளைப் புனைந்திருக்கிறார்.

# அருட்பெருஞ் ஜோதி

இந்நாளில் விஞ்ஞானிகள் எத்தனை எத்தனையோ அற்புதங்களை நிகழ்த்தக் காண்கிறோம். இதுபோல முன்னாளில் மெய்ஞ்ஞானியர்களும் எண்ணிறந்த அற்புதங்களை இயற்றி விருக்கின்றனர். அவற்றில் ஒன்று மரணத்தை வென்றதாகும். பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி. இது மனித சமுதாயத்தின் விதி. இந்த விதிக்கு முடிவு கண்டு மரணத்தை வெல்ல முயன்றார் ஒரு மெய்ஞ்ஞானி. அவர் வடலூர் ராமலிங்க வள்ளலார் ஆவார்.

வள்ளல் பெருமான் இன்றைக்குத் தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிச் சரியாக ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்து, புரட்சிகரமான அறவுரைகள் போதித்து, ஆயிரமாயிரம் தமிழ்ப் பாக்களை இயற்றி வைத்து 1874ல் ஜனவரி 30ல் மறைந்து போனார். உடலோடு மறைந்தாரென்பது வரலாறு.

வள்ளல் பெருமான் வாழ்ந்த காலத்திலேயே வடபாகத்தில் வேறு முப்பெரும் ஞானிகள் வாழ்ந்தனர். அவர்கள்





ம.பொ.சிவஞானம்

ராஜாராம் மோகன் ராய், தயானந்த சரஸ்வதி, ராமகிருஷ்ண பரமஹம்ஸ ராவர். இந்த நான்கு ஞானியர்களும் நான்கு பேரியக்கங்கள் தோன்ற வழி வகுத்தனர். ஆம்! வங்கத்தில் தோன்றிய ராஜாராம் மோகன்ராய் பிரம்ம சமாஜம் என்னும் அமைப்பினைத் தோற்றுவித்தார். தயானந்த சரஸ்வதி ஆர்ய சமாஜம் நிறுவினார். ராமலிங்க வள்ளலார் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் கண்டார். ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தாமாக ஒரு நிறுவனம் காண வில்லை யென்றாலும் அவருக்குப் பின் அவருடைய சீடர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கம் நிறுவி அதன் சார்பில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் மடமும் அமைத்தார்கள். தமிழகத்தின் வரலாற்றில் சமய சமுதாயத் துறைகளில் புரட்சிகரமான பல மாறுதல்களைக் காண முதன் முதலாக ஒரு சங்கம் அமைத்த பெருமை ராம லிங்க வள்ளலாருக்கே உரியதாகும். இந்தச் சங்கம் நிறுவி இந்த மாதத்துடன் சரியாக ஒரு நூற்றாண்டு நிறைவு பெறுவதாகச் சொல்லப்படுகிறது. தமது சங்கத்துக்குச் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் என்ற பெயரை முதன் முதலில் வழங்கிய பெருமான் பின்னர் அதனைச் சடாந்த சமரச சுத்த சன்மார்க்க சங்கம் எனவும் சடாந்த சமரச சுத்த சிவசன்மார்க்க சங்கம் எனவும் அழைக்கலானார்.

சமரச சுத்த சன்மார்க்க சங்கம் புதியதொரு மதமோ, மடமோ அல்ல. சர்வ சமயங்களிடையேயும் சமரசம் கண்டு மனிதர்களிடையே மரணமிலாப் பெரு வாழ்வுக்கலையைப் பிரசாரம் செய்யும் ஓர் இயக்கமாகும். இயக்கத்தின் தலைவர் அதன் ஸ்தாபகரான ராமலிங்கர் அல்லர். தம்முடைய சங்கத்தின் தலைவர் தில்லையம்பதியில் அருள் நடனம் புரியும் அம்பல வாணப் பெருமானே என்றார் ராமலிங்கர்.

"செத்தவர்கள் எல்லாம் திரும்ப எழுந்துவரச்
சித்தம்வைத்துச் செய்கின்ற சித்தியனே — சுத்தநிலை
சன்மார்க்க சங்கத் தலைவனே நிற்போற்றும்
என்மார்க்கம் நின்மார்க்க மே!"

என்னும் பாடலில் சன்மார்க்க சங்கத் தலைவன் கூத்தப் பெருமானே என்று கூறுகிறார். ராமலிங்க வள்ளலார் சன்மார்க்க சங்கத்துடன் வேறு சில அமைப்புகளையும் கண்டார். வடலூர்ப் பெருவெளியில் சத்தியஞான சபை என்ற ஒரு புதுக்கோயிலை, உலகிலுள்ள எல்லா மதத்தினரும் குழுமி ஒளி வடிவில் பரம் பொருளை வழிபடக்கூடிய பொதுக் கோயிலை நிறுவினார். சத்திய தரும சாலை என்னும் பெயரில் பசித்தவர்களுக்கு நாள்தோறும் சோறு போட அன்னசாலை யொன்றை அமைத்தார். அங்கு தம் கையாலேயே உணவு சமைப்பதற்கான அடுப்பினில் தீமூட்டி, 'இந்தத் தீயை அணைய விடாமல் காத்து வாருங்கள்' என்று தமது சீடர்களுக்குப் போதித்தார்.

சமரச வேதப் பாடசாலை ஒன்றை வடலூரில் நிறுவி அங்கு தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மொழிகளைப் பயிற்று விக்கவும், இந்து சமயசாத்திரங்களைப் போதிக்கவும் ஏற்பாடு செய்தார். வடலூருக்கு இரண்டு மைல் தொலைவில் உள்ள மேட்டுக்குப்பம் என்னும் சிற்றூரில் சித்திவளாகம் என்னும் பெயரில் சிறியதொரு வீட்டினை அமைத்து, அதனைத் தமது இருப்பிடமாகக் கொண்டார் ராமலிங்கர். அங்குதான் அவர் தம்முடைய சீடர்களுக்கும், தம்மைக் காண வரும் அன்பர் களுக்கும் அற உபதேசங்களைப் போதித்தார். ராமலிங்கர் மனிதன் சாகாமலிருக்க முடியும் என்றும் சாவு வருவது மனித னுடைய அஜாக்கிரதையினால்தான் என்றும் ஓயாமல் கூறிவந்ததோடு நூறு நூறு பாடல்களிலும் எழுதி வைத்தார். செத்தவர்களை எரிக்காமல் புதைக்க வேண்டும் என்பதும் அவர் போதித்த சித்தாந்தம். சுத்தமான சன்மார்க்கி சாகமாட்டான், சாகிறவன் சன்மார்க்கி அல்ல என்றெல்லாம் கூறினார். சுத்த சன் மார்க்கம் விளங்கும்போது அதற்கு முன் செத்தவர்க ளெல்லாம் திரும்ப எழுந்து வருவார்கள் என்று கூடக் கூறினார்.

அடிகளாருடைய சுத்த சன்மார்க்க சங்கம் சாதி வேற்றுமைகளை, சமய வேறுபாடுகளை வெறுத்தது.



சாதியிலே மதங்களிலே சமய நெறிகளிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே அபிமானித் தலைகின்ற உலகீர்
அலைந்தலைந்து வீணே நீர் அழிதல் அழகலவே
நீதியிலே சன்மார்க்க நிலைதனிலே நிறுத்த
நிருத்தமிடும் தனித் தலைவர் ஒருத்தர் அவர்தாமே
வீதியிலே அருட்ஜோதி விளையாடல் புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றேன் உமையே

என்னும் பாடல் வள்ளலார் காண விரும்பிய புதிய சமுதாயத்தின் சித்திரமாகும். பொதுவாக, மதங்களை யெல்லாம் அவர் வெறுத்திருப்பினும் அவற்றினிடையே சமரசம் காண்பதையே விரும்பினார். அதாவது மதங்களை அழிப்பதை விட அவற்றினிடையே ஒருமைப்பாடு காண்பதையே கொள்கையாகக் கொண்டார். எம்மதமும் சம்மதம் என்பது அவர் தொடுத்த கோஷம். சைவ சமயக் குரவர்களில் ஒருவரான ஞான சம்பந்தப் பெருமானை மானசீகக் குருவாகக் கொண்டார். தமிழர் தெய்வமான முருகப் பெருமானே ஞானசம்பந்தராக அவதரித்தா ரென்பது அடிகளின் கொள்கை. மாணிக்க வாசகரை வழிகாட்டியாகக் கொண்டு அவர் இயற்றிய திருவாசகத்தை ஆழ்ந்து பயின்று அதன் கருத்துக்களையே தம்முடைய சங்கத்தின் கொள்கைகளாக்கினார். திருவாசகத்தில் அவருக்கிருந்த ஈடுபாடு இன்னொருத்தரை இனை சொல்ல முடியாததாகும். சைவ சமயக் குரவர்கள் நால்வரையும் பற்றி அடிகளார் இயற்றியுள்ள பாடல்கள் கல் மனத்தையும் கரைக்கத் தக்கனவாகும்.

அடிகளார், துவக்கத்தில் சிதம்பரத்தையே பக்திக்குரிய தலமாகக் கொண்டு, அங்கே பல ஆண்டுகள் தங்கி வாழ்ந்தார். ஆரம்பத்தில் தணிகை முருகனையே தாம் வழிபடும் மூர்த்தியாகக் கொண்டாரெனினும் பின்னர் தில்லையம்பலவாணரையே வழிபடு தெய்வமாகக் கருதினார்.

நாளடைவில் சீர்திருத்தக் கொள்கைகளைப் பரப்புவதில் அதிக ஆர்வம் ஏற்பட்டதன் விளைவாக, வடலூர் சென்று அங்கேயே இறுதிவரையில் வாழ்ந்தார். அப்போதும் சிதம்பரத்தை மறவாதவராகி வடலூருக்கு உத்தரஞான சிதம்பரம் எனப் பெயர் தந்தார். வடலூரில் தாம் அமைத்த புதிய கோயிலுக்கும் சிதம்பரத்தில் உள்ளதைப் போன்று ஞானசபை என்று பெயரிட்டார். சமய பேதங்களை வெறுத்த நிலையில் சமய நெறிகளை விரும்பினார். அந்த வகையில் சைவ சமய நெறிகளை இறுதிவரை உறுதியாகக் கடைப்பிடித்தார். சமய சமரசத்தை வலியுறுத்தும் பொருட்டு அடிகள் எண்ணற்ற பாடல்களையும் அருளினார்.

" பெருமைபெறு அருளுடையார்
அம்பலத்தே நடிக்கும்
பெருந்தகைஎன் கணவர்திருப்
பேர்புகல்என் கின்றாய்
அருகர்புத்தர் ஆதியென்பேன்
அயன்என்பேன் நாரா
யணன்என்பேன் அரன்என்பேன்
ஆதிசிவன் என்பேன்
பருகுசதா சிவம்என்பேன்
சத்திசிவம் என்பேன்
பரமம்என்பேன் பிரமம்என்பேன்
பரப்பிரமம் என்பேன்
துருவுசுத்தப் பிரமமென்பேன்
துரியநிறை வென்பேன்
சுத்தசிவம் என்பன்இவை
சித்துவிளை யாட்டே "

வள்ளல் பெருமான் இயற்றிய பாடல்கள் எத்தனை எத்தனை ஆயிரமோ? அவற்றில் காப்பாரற்று மறைந்தவை போக மற்றுள்ள ஆறுயிரம் பாடல்களை ஆறு திருமுறைகளாகப் பாகுபடுத்தி முதல் நான்கு திருமுறைகளை அடிகளார் காலத்திலேயே வெளியிட்டனர் அவருடைய சீடர்கள்.

அந்தப் பாடல் தொகுப்புக்குத் திருவருட்பா என்று பெயரிடப்பட்டது. சைவத் திருமுறை பன்னிரண்டு என்பது நாடறிந்ததாகும். திருமுறை என்னும் பெயரை வள்ளலாரின் அருட்பாக்களுக்குப் பயன்படுத்தியதையும் அவர் தம் பாடல்களை அருட்பா என்று அழைத்ததையும் சைவர்களில் மிக மிக வைதிகரானவர்கள் வெறுத்தனர். இதனால் கருத்து வேற்றுமை தோன்றியது. வள்ளலாரை ஆதரித்தும் எதிர்த்தும் மேடை போடப்பட்டது. வாதம் வலுத்தது. அது வழக்காக மாறி நீதி மன்றமும் சென்றது. ஆனால் வள்ளல் பெருமான் இதையெல்லாம் விரும்பவில்லை; வெறுத்தார். அருட்பா என்ற பெயருக்குப் பொருள் உரைப்பவர் போலக் கீழ்வரும் வரிகளைப் பாடினார்.

" நடராஜர் பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு
சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு
ஜீவர்கள் பாட்டெல்லாந் தெருப்பாட்டு
அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லா மருட்பாட்டு "

## ஸ்ரீ ஹரி சுற்றுப்பயணம்

நாட்டு வைத்தியம் டாக்டர் ஸ்ரீஹரி அவர்கள் 15-6-65 டெல்லிக்குப் புறப்பட்டு 17-6-65 டெல்லி சேர்கிறார். அங்கு ஜனத் இந்தியா ஹைப்பில் தங்குகிறார். 19-6-65 அவ்விடமிருந்து புறப்பட்டு 21-6-65 காலை ஹைதராபாத் வந்து சேர்கிறார். அங்கு கல்தான் பஜார் ரோட்டில் உள்ள நியூ தாஜ்மகால் ஹோட்டலில் தங்கியிருப்பார். அங்கிருந்து 22-6-65 மாலை புறப்பட்டு 23-6-65 சென்னை வந்து சேருகிறார்.

கருத்துவேற்றுமை ஒரு சில விபரீதங்களுக்கு இடமளித்தது என்றாலும், அந்நிய மதங்கள் வரவாலும் அரசியல் ரீதியில் அவை பெற்ற ஆதிக்கத்தாலும் உறங்கிக் கிடந்த சைவ சமயத்தார் வள்ளலாரின் பிரசாரத்தால் புத்துணர்ச்சி பெற்றனர்.

**வ**ள்ளலார் ஜீவகாருண்யத்தை அளவு கடந்து வற்புறுத்தினர். அவ்வகையில் சமணரையும் மிஞ்சினர். ஜீவகாருண்ய ஒழுக்கம் என்னும் தலைப்பில் ஐந்து கட்டுரைகளை வெளியிட்டார். புலால் உண்ணும் வழக்கத்தைக் கடுமையாகக் கண்டித்து, புலால் உண்பவர்களெல்லாம் சன்மார்க்க சங்கத்தவருக்கு உறவினத்தார் அல்லர், அவர் புறவினத்தார் என்று பாடினர். தெய்வத்தின் பெயரால் உயிர்க் கொலைகள் செய்து ஆடு, கோழி முதலியவற்றைப் பலியிடுவதையும் வன்மையாகக் கண்டித்தார்.

வள்ளல் பெருமான் தம்முடைய சமரச சித்தாந்தத்துக்கு, ஜீவகாருண்ய ஒழுக்கத்துக்கு ஆன்மநேய ஒருமைப்பாடு என்னும் பெயரினைத் தந்தார். அவருடைய ஒருமைப்பாடு, ஆன்மீகம்—அரசியல் ஆகிய இரண்டும் கலந்ததாகும். பாரத தேசிய ஒருமைப்பாட்டை அடிப்படையாக வைத்து, அதன் மேல் மனித சமுதாய ஒருமைப்பாடு என்ற கட்டடத்தை எழுப்பி, அதன்மேல் உயிர்க் குலத்தின் ஒருமைப்பாட்டையும் வலியுறுத்தி, ஆன்மநேய ஒருமைப்பாடு சமரச சுத்த சன்மார்க்கக் கொடியைப் பறக்க விட்டுள்ளார். இந்திய தேசிய ஒருமைப்பாட்டை ஒரு நிபந்தனையோடு வரவேற்றார். அகிலமாம் சகோதரத்துவத்தின் மூலக் கருத்தின் சாரத்தை ஒத்துக் கொண்டு இந்தியாவில் சகோதர அறம் நிலைநாட்டப் பெறல் வேண்டும் என்பது அடிகளாரின் உபதேசம். ஆம்! தேசியத்தையும் சர்வ தேசியத்தையும் பிணைத்து வைத்துப் பேசினர். அடிகளார் பல சுவையான கீர்த்தனைகளைப் பாடி வைத்துள்ளார். அவர் எழுதிய உரைநடை நூல்களில் மனுமுறை கண்ட வாசகம் மிகச் சிறந்ததாகும். வள்ளலார் காலத்தில் வாழ்ந்த மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, திருப்புகழ் தண்டபாணி சுவாமிகள், மாயூரம் முன்சிப் வேதநாயகம்பிள்ளை ஆகிய சான்றோரெல்லாம் அவரைப் பெரிதும் போற்றிப் புகழ்ந்தனர். சீர்திருத்தக் கொள்கையுடையவராயினும், சாதி மதக் காழ்ப்பின்றி, வகுப்பு வாத உணர்வின்றி வாழ்ந்தார்.

## பஞ்சாங்கத் துக்கடா

● திதி, வாரம் (கிழமை), நட்சத்திரம், யோகம், கரணம் என்ற இந்தப் பஞ்ச (ஐந்து) அங்கங்களின் நடைமுறையைக் கூறுவதுதான் பஞ்சாங்கம் (பஞ்ச அங்கம்).

● "சுத்த பத்தாம் பசலியா இருக்கியே!" என்கிறோமே, அதில் பசலி என்பது "பஸ்லி" என்பதாகும். முஸ்லிம் அரசர்கள் நில வரி வசூல் செய்வதற்காக வரையறுத்த காலத்துக்குத்தான் "பஸ்லி" என்று பெயர். பஸ்லிதான் பசலியாகிவிட்டது. "பஸ்லி" வருஷம் ஜூலை மாதம் முதல் தேதி ஆரம்பமாகிறது.



● தென் இந்தியாவில் மூன்று வகைப் பஞ்சாங்கங்கள் கணித்து வருகின்றனர். இவற்றில் தமிழ்நாடு, இலங்கை: வாக்கிய பஞ்சாங்கம், திருக்கணிதம் பஞ்சாங்கம். ஆந்திரர், கன்னடியர்: சித்தாந்த பஞ்சாங்கம் உபயோகிக்கின்றனர்.

● பம்பாயில் சத்ரே என்பவரும், காசியில் பாபுதேவ சாஸ்திரி என்பவரும் சென்னையில் ரகுநாதாச்சாரியார், சுந்தரேச சிரௌதிகள் என்பவர்களும்தான் இந்தியாவில் முதன் முதலில் பஞ்சாங்கம் கணித்தவர்கள். அதாவது பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் எனலாம். ஆனால் ஐரோப்பாவில் முதன் முதலில் பஞ்சாங்கம் கணிக்கப்பட்டது பதினைந்தாம் நூற்றாண்டில்!

● கேம்பிரிட்ஜ் நகரில் 1667ம் ஆண்டு ஓர் ஆங்கிலேயப் பஞ்சாங்கம் பிரசுரித்தனராம். அந்தப் பஞ்சாங்கப் பிரதிகள் இரண்டுதான் இப்போது இருக்கின்றனவாம். விலைமதிப்பற்ற ஒன்று மாசசூசெட்ஸ் நகரத்துப் பொருட்காட்சிச் சாலையில் உள்ளது. மற்றொன்றை அமெரிக்க "பஞ்சாங்க சேகரி" ஒருவர் வைத்திருக்கிறாராம்.

- இதா

ஒளி வழிபாட்டை விரும்பி வற்புறுத்தினரென்றாலும், விக்கிரக வழிபாட்டையும் ஒரு நிபந்தனையுடன் ஏற்றார். "பிரம்மத்தை அறிந்தவர்கள் உருவமின்றி அருவமாக அதனை வழிபடட்டும், சாமான்ய மக்கள் உருவத்தைக் கொண்டு வழிபடட்டும்" என்று உபதேசித்தார். உருவ வழிபாட்டை வெறுத்துப் பிரசாரம் செய்த பிரும்ம சமாஜிகளுடன் கருத்துப் போர் நிகழ்த்தினர் வள்ளலார். நாத்திகத்தை அவர் முழுமூச்சுடன் எதிர்த்தார்.

தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலத்திலேயே நாத்திக வாதம் இருந்திருக்கிறது. சோழன் நலங்கிள்ளிக்கு அறமுரைத்த உறையூர் முதுகண்ணன் சாத்தனர் என்ற சங்கப் புலவர்,

"நல்லதன் நலனும் தீயதன் தீதும்
இல்லை யென்போர் இனனு இலியார்"

புறம்-29

என்று கூறியதால் இதனை அறிகிறோம். இந்த வரிகளுக்கு "நல்வினையினது நன்மையும் தீவினையினது தீமையும் இல்லை என்று சொல்லுவோர்க்கு இனமாகாது தொழிவாயாக" என்று பொருள் கூறியுள்ளார் உரையாசிரியர். இதில் வரும் 'இல்லை யென்போர்' என்ற தொடருக்கு 'நாத்திகர்' என விளக்கம் தருகிறார் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர். தமிழ் மறை தந்த வள்ளுவப் பெருந்தகை,

"உலகத்தார் உண்டென்பதில் லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்"

என்னும் குறளில் நாத்திகரையே குறிப்பிடுகின்றார். கடவுளும் மறுபிறப்பும் இருவினைப்

# யானெனும் பேரொளி

[ஆதி சங்கரர் அருளிய ஏக ச்லோகத்தின் தமிழ் வடிவம்.]

**எவ்வொளி யதனுல் அறிகிருய்? பகலில்**
**இரவியால், இரவிலே விளக்கால்**

**செவ்விய நிலவால். அவற்றினை எதனுல்**
**தெளிகிருய்? எனதரு விழியால்**

**அவ்விழி மூடின்? அறிகிறேன் மனத்தால்**
**அதற்கொளி? யானெனும் அறிவே**

**அவ்வொளி தன்னின் மேலெது? ஐயா**
**யாவினும் பேரொளி யானே.**

'நாணல்'

பயனும் இல்லை யென்னும் நாத்திகர் வள்ளுவர் காலத்தி லும் வாழ்ந்தனர் என்பது புலனுகும்.

வள்ளல் பெருமானைச் சூழ்ந்திருந்த சீடர்கள் அவருக்கு மன நிறைவு தரும் வகையில் நடந்து கொள்ளவில்லை. அந்தப் போக்கு அடிகளாருக்கு மனவேதனை தந்தது. வைதிகச் சைவர்களின் பொருளற்ற எதிர்ப்பும் அவருக்கு வருத்தம் தந்திருக்க வேண்டும். எல்லாமாகச் சேர்ந்து உலக வாழ்க்கையில், பூத உடலுடன் மக்கள் மத்தியி லேயே நடமாடும் நிலையில் அவருக்கு வெறுப்பைத் தந்து விட்டது. அதனுல் மறைந்துவிட முடிவெடுத்தார். சீடர்கள் மத்தியில் வாழ்ந்த காலத்திலேயே அவர் அடிக்கடி மறைந்து வருவது வழக்கம் என்றும் சொல்லப் படுகிறது. ஆனுல் சீடர்களுக்குச் சொல்லி விட்டே அவர்க ளிடமிருந்து விடைபெற்று மறைந்து விட முடிவெடுத்தார் ராமலிங்கர். மறையுங்கால், தம்மைச் சுற்றியிருந்தவர் களிடம் அவர் கூறியது வருமாறு: ''நான் இப்போது விணில் சொல்லும் சிறந்த உண்மைகளையே வடக்கில் மகாத்மாக்கள் தோன்றி உங்களுக்குச் சொல்வார்கள். அப்போது தெரிந்து கொண்டு நீங்கள் மதித்து நடப் பீர்கள். நான் சொல்லிக் கேட்பதில்லை என்று முடிவு கட்டிக் கொண்டு விட்டீர்கள்.''

1874ம் ஆண்டு ஜனவரி 30ந் தேதி நள்ளிரவில் தாம் தங்கியிருந்த சித்திவளாகம் மாளிகையில் தாம் வழக்க மாக நிஷ்டை புரியும் அறையில் புகுந்து, வெளிப்புறத்தில் தாளிட்டுக் கொள்ளுமாறு கூறி, மறைந்து விட்டார் வள்ளலார். மறையுங்கால், ''நான் மீண்டும் வருவேன்'' என்று கூறிச் சென்ற தாக அடிகளாரின் தலை மாணுக் கர் தொழுவூர் வேலாயுத முதலி யார் கூறியுள்ளார். ராமலிங்கர் மறைந்த செய்தியை அறிந்து கொள்ளும் பொருட்டு, தென் ஆர்க்காடு கலெக்டர் ஜே. எச். கார்டினல் ஐ.சி.எஸ். அவர்கள் வடலூருக்கு வந்து, விரிவாக விசாரணை நிகழ்த்தினுர். அதன் விளைவாகக் கலெக்டர் துரைமக னுர் அடிகளாரைப் பற்றி வெளி யிட்டுள்ள உயர்ந்த கருத்துக் களைத் தென் ஆர்க்காடு கெஜட் டில் இன்றும் காணலாம்.

ராமலிங்க வள்ளலாரை பிரும்மஞான சங்கத்தின் ஸ்தா பனத் தலைவியான மேடம் பிளவெட்ஸ்கி அம்மையார் வாயாரப் புகழ்ந்துள்ளார். ''ராமலிங்கர் சந்தேகமில்லாமல் ஒரு மகாத்மா'' என்று அவர் கூறியுள்ளார். ராமலிங்கரின் மறைவுக்குப் பிறகு, இடையில் சில ஆண்டுகள் சமரச சுத்த சன்மார்க்க சங்கம் செயல்பட வில்லை. பின்னர் வள்ளலார் காலத்திலும் வேகமாகச் சங்கம் செயல்பட்டது. தமிழகத்தில் ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஊர் களில் சன்மார்க்க சங்கங்கள் செயல்படுகின்றன. பக்தி நெறி தழைக்க, வள்ளல் பெருமானே, அவர் போதித்த அறிவுரை களை, அவர் பாடிய அருட் பாக்களைப் பயன்படுத்துவோ மாக. அடிகளார் அருளாளர் வரிசையிலே தாம் முதல்வர் என்ரே, இறுதியானவர் என்ரே எண்ணிஞரில்லை. தமக்கு முன் னும் அருளாளர் பலர் தோன்றி னர் என்பதை நினைவூட்ட 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்ரே' என்று பாடி ஞர். பின்னும் அருளாளர் தோன்றுவர் என்பதை உறுதிப் படுத்த, வடக்கேயிருந்து மகாத் மாக்கள் வருவர் என்ருர். இந்த உண்மையை மறவாமல் வள்ள லாரைப் பின்பற்றுவோர் அவ ருக்கு முன்னும் பின்னும் தோன் றிய ஞானியரையும் மதித்து, சைவ நெறியை, தெய்வ நினைப் பைக் காப்பார்களாக.

**வாழ்க, சமரச சுத்த**
**சன்மார்க்க சங்கம்!**

இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்

இன்றைய நாகரிகம்

"பட்டுப் பூச்சியின் சிறகுகளைப் போல் அவள் கண்ணிமைகள் படபடத்தன;" "கயல் விழிகளால் கனிவு ததும்பப் பார்த்தாள்" என்றெல்லாம் கதாசிரியர்கள் பெண்களின் நயனங்களை வர்ணித்திருப்பதைப் படித்திருக்கிறோம். உண்மையிலேயே அத்தகைய எழிலார்ந்த நயனங்கள் அமையப்பெற்ற அதிர்ஷ்டசாலிகள் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களுக்கு ஏற்ற விதத்தில் மூக்குக் கண்ணாடி பிரேம்களும் மீன் வடிவத்திலும் வண்ணத்துப் பூச்சியின் சிறகுகளின் வடிவத்திலும் அழகழகாகக் கிடைக்கின்றன. கண்ணாடி அணிவது தனக்குள்ள ஒரு குறையை எடுத்துக் காட்டும் என்று பெண்கள் கருதி வெட்கப்படும் காலம் மாறிவருவதற்குத் புதுசு புதுசான பாணிகளில் பிரேம்கள் உள்ளங்களைக் கவருவது முக்கிய காரணம்.

அப்படியே கண்கள் கெட்டுப்போக மறுத்தால்தான் என்ன? கூலிங்கிளாஸ் அல்லது கறுப்புக் கண்ணாடி அணிந்தால் போயிற்று! படத்தில் நீங்கள் காண்பது வண்ணத்துப் பூச்சி மாடல் ஷெல் பிரேம்.

*பிரேம் உதவியவர்கள்:*

எஸ். பி. எஸ். தவே அண்டு சன்ஸ், 173, பிராட்வே, சென்னை-1



நாளொரு மேனியாக...

# எழிலோங்கச் செய்வது

# ரெக்ஸோனா








கொஞ்சி உறவாடி நாளொரு மேனியாக உமது
எழிலுக்குப் பொலிவை ஊட்டி வளர்ப்பது ரெக்ஸோனா.
இதில் வியப்பென்ன? சரும எழிலுக்கான தைலங்களின்
கலவையான 'கேடில்' இருக்கிறது ரெக்ஸோனாவிலே.
தவிரவும், கமகமவென்று மணம் கமழ்வதால்,
மணமோங்கி மலரும் உங்கள் பொலிவு.

**கேடில் அடங்கிய ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு உகந்தது.**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

RX. 24-140 TM

# படித்துப் பாருங்கள்

## ❊ அத்வைத கிரந்த கோசம்
## ❊ வடமொழியில் கம்பராமாயணம்

ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறு வேறல்ல என்பதை விளக்கும் அத்வைத சித்தாந்தத்தை விட உயர்ந்த ஒரு தத்துவம் உலகில் இல்லை. இந்தத் தத்துவத்தை அநுபவத்தில் கண்ட மகா புருஷர்கள் பலர் வாழ்ந்த நாடு நம்முடையது. பரம்பொருளுடன் ஒன்றியிருக்கும் அம்ருத நிலையைப் பாரதத்தின் பெருமக்கள் அநாதி காலமாக அறிந்து அநுபவித்தவர்கள். நாம் பெற்ற இவ்வின்பத்தை வையகத்துக்கு எல்லாம் ஆக்கித் தந்த கருணாமூர்த்திகளாகவும் அவர்கள் திகழ்கிறார்கள்.

உன்னத அத்வைதத்சாரத்தைக் குறித்து, உத்தமமான வாக்குகளில் உலகுக்கு எடுத்து இயம்பியவர்களின் பெயர்களையும், அவர்கள் யாத்துத் தந்த நூல்களின் பெயர்களையும் நினைக்கும்போதே புளகாங்கிதமும் கம்பீரமும் கொண்ட ஆனந்தம் உண்டாகும். வாழையடி வாழையாக வந்த இத் திருக்கூட்டத்தினரையெல்லாம் ஒருசேரத் தரிசித்து, 'ஆஹா, நாம் இப்படிப்பட்ட மகனீயர்களின் வாரிசுகளா?' என்று எண்ணிப் பெருமிதம் கொள்ள வைக்கிறது, 'அத்வைத கிரந்த கோசம்' என்ற இந்த அற்புத நூல்.



வேத காலத்திலிருந்து தொடங்கி, அத்வைத சித்தாந்தத்தை அசைக்க முடியாத ஒரு மதமாக ஸ்தாபித்த ஆதிசங்கரர் வழியாகப் பாய்ந்து இன்றளவும் வற்றாது பெருகும் அபேத வேதாந்தத்தை உலகுக்கு அறிவித்த மகான்கள் யாவரைப் பற்றியும் இந் நூலில் குறிப்புக்கள் காண்கிறோம்.

அத்வைதம் குறித்து எவ்வளவு நூல்கள் புத்தக வடிவிலும் ஏட்டு வடிவிலும் இருக்கின்றனவோ, அவை அனைத்தையும் பற்றி 'அத்வைத கிரந்த கோசம்' நமக்குத் தெரிவிக்கிறது. நூலாசிரியர் பெயர், நூல் கிடைக்கும் இடம், நூலின் லட்சணம் இவையும் பட்டியலாகத் தரப்பட்டிருக்கின்றன. முழு விவரமும் கிடைக்காத நூல்களைப் பற்றியும் பட்டியல் உள்ளது. ஆங்கிலம், ஹிந்தி ஆகிய இரு மொழிகளிலும் அழகிய முகவுரைகளும் ஆங்கிலம், வடமொழி ஆகிய இரு மொழிகளிலும் நூல்களின் பெயர் பட்டியலும் அமைந்துள்ளன.

அத்வைதப் பெரியார்களின் சித்திரங்கள் ஆங்காங்கு நூலை அணி செய்கின்றன. வியாச பகவானையும், ஆதி சங்கர பகவத் பாதர்களையும் அட்டையில் காண்கிறோம். அத்வைதத்தின் உருவமாக இன்று நம்மிடையே வாழும் ஸ்ரீ காமகோடி பரமாச்சாரியர்களைச் சீடர்களுடன் மற்ற மூன்று அட்டைகளிலும் காண்கிறோம்.

பெருத்த ஆராய்ச்சி, உழைப்பு, ஊக்கம், இவற்றின் மீது காஞ்சிபுரம் உபநிஷத் பிரம்மேந்திர மடத்தைச் சேர்ந்த ஸ்ரீ இஷ்ட சித்தீந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் சீடரொருவர் இந்நூலைத் தமது பெயரைத் தெரிவிக்காமல் விநயமாகத் தொகுத்து உருவாக்கியுள்ளார். இந்த ஆராய்ச்சிக்கும் உழைப்புக்கும் ஊக்கத்துக்கும் ஊற்றுக் கண் ஸ்ரீ காமகோடி பெருந்தகை அவர்களின் அநுக்கிரகமேயாகும். அத்வைத ஆராய்ச்சியாளருக்கே இந்நூல் பெரிதும் உதவுமெனினும், ஆஸ்திகர்கள் அனைவரின் இல்லங்களிலும் இந்நூல் இருந்தாலே புண்ணியம் எனலாம்.

[வெளியீடு: தேவ வாணி பரிஷத், 1, தேச பிரியா மார்க்கெட், கல்கத்தா; கிடைக்குமிடம்: ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், 4, பிரான்ஸிஸ் ஜோஸப் தெரு, சென்னை–1; விலை: ரூ. 10.]

●

'சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்' என்றார் அமர கவி பாரதியார். நமது தமிழ்மொழி இப் பணியை ஆதிகாலந்தொட்டே சிறந்த முறையில் செய்து வந்திருக்கிறது. ஆதிகவி வால்மீகி எழுதிய இராமாயணத்தைக் கம்பர் தமிழுக்குத் தந்தார். அதுவும் எப்படி? வழி நூலெனத் தோன்றாமல் முதல் நூலெனத் தோன்றும்படி தந்தார். எனவே அவரது கம்பராமாயணம் சிறப்புப் பெற்றது. தமிழ் மக்கள் சுவைத்து இன்புறும் கம்ப ராமாயணத்தின் சில பகுதிகள் சொல்லோவியமாகத் துலங்குகின்றன. ஆதிகவியின் அருமையான காவியத்துக்கு மெருகு ஊட்டிப் பெருமை அளிக்கின்றன. இதன் பெருமையைப் பாரத மக்களுக்கு உணர்த்த ஸ்ரீராம தேசிகன் முனைந்து பாலகாண்டத்தை வடமொழியில் கவிதையாகப் புனைந்து தந்துள்ளார்.

பாரதியாரின் கவிதைகள் சிலவற்றையும் திருக்குறளையும் ஆண்டாள் பாசுரங்களையும் வடமொழியில் வழங்கியுள்ள ஸ்ரீ ராமதேசிகனது இந்த முயற்சி மிகப் பாராட்டுக்குரியது.

கிடைக்கும் இடம்: ஸ்ரீ எஸ். என். ஸ்ரீ ராமதேசிகன், 25, பார்டிட் ரோட், சென்னை–17; விலை: ரூ. 4.50.

# அவள் எங்கே?

10

கதை: கௌசிகன்

சித்திரம்: ரமணி

ஏழுமலை, என் மனம் குழம்பிக் கிடக்கிறது. நாம் சரியான விலாசத்துக்குத்தானா வந்திருக்கிறோம்?

உள்ளே வரலாம்.

துப்பறிவதில் வல்லவரான சந்துரு அவர்களின் வீடு இதுவேதான்.












வியப்படைந்த அந்த இரட்டையர்களைத் திகைப்பிலாழ்த்தும் வகையில் மாலதியின் வழக்கின் பின்னால் மறைந்துள்ள ரகசியங்களை அவர்களிடம் விளக்கினார்கள் டாக்டர் சுரேஷும் ராஜுவும். இறந்ததாகக் கருதப்பட்ட மாலதி உண்மையில் இறக்கவில்லை என்பதையும், கொலை செய்ததாகக் கருதப்படும் குமார் உண்மையில் குற்றவாளியல்ல என்பதையும் தங்கள் கண்காணிப்பிலிருந்த மாலதி முதல் நாளிரவு இல்லத்தில் தப்பியோடி விட்டதையும் விளக்கி இவ்வளவிற்கும் காரணமான அந்த மர்ம மனிதனைக் கண்டுபிடித்து அம்பலப்படுத்த வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள்......

நான் ஏதோ வழக்கமான சாதாரணக் கொலை கேஸ் என்று எண்ணினேன். இதன் பின்னால் இத்தனை சிக்கல்கள் இருக்கின்றனவா?

தலையற்ற உடல் என்று படித்த போதே இது அசாதாரணமானது என்று என் உள் மனதில் ஏதோ நெருடியது. ஆனால் அக்கறை காட்டவில்லை.

நீங்கள் அக்கறை காட்ட வேண்டும் என்று வேண்டிக் கொள்ளவே நாங்கள் வந்திருக்கிறோம்.

அந்த மர்ம மனிதனை விட, மறைந்த மாலதியைப் பற்றித்தான் இப்போது எங்கள் தவிப்பெல்லாம்.

நீங்கள் அவளுக்குத் தூக்க மருந்து கொடுத்திருந்தால் இந்த இக்கட்டான நிலை ஏற்பட்டிருக்காது டாக்டர்.

சாதாரண கேஸாக இருந்திருந்தால் கொடுத்திருப்பேன். அவளுக்கு நினைவு திரும்ப வேண்டும் என்பதால்தான் தூக்க மருந்தை உபயோகிக்கவில்லை.

உங்கள் தங்கை கிளம்பிச் சென்று பதினாறு மணி நேரமாகின்றது. அவள் எப்படி என்ன உடுத்தியிருந்தாள் என்ற விவரங்களைக் கூறமுடியுமா?

என் உடைகளைத் தான் அவள் உடுத்திக் கொண்டு போயிருக்கிறாள். தளிர் பச்சை வர்ணத்திலான புடவை. ரோஜா நிற ஜாக்கெட் மூடியது. ஆயாய் சிறு வளையுடன் ஏழு டம்பப் பையும் கூட அவளிடம் இருக்கிறது...

நினைவு வந்து மறுபடி மயங்கிய பின் மாலதி அந்த நிலையில் ஏதாவது பிதற்றினாளா? நினைவு படுத்திச் சொல்லுங்கள்..

அ...ஆமாம்! ராஜா... ராஜா! என்று இரு தடவைகள் மெல்ல முனகினாள்..

தொடரும்...



# வல்லவனுக்கு வல்லவன்





இது நான்கு வல்லவர்களின் கதை. ஒவ்வொரு வரும் அவரவர் துறையில் வல்லவர்கள். ரமேஷ், பாபு, பிச்சுவா பக்கிரி, பிரகாஷ் —

பரம ஏழையும், என்ஜினீயருமான ரமேஷ் லக்ஷாதிபதியின் மகள் கீதாவைக் காதலிக்கிறான். அந்தக் கனவு நனவாகும் தருணத்தில், விதி சதி செய்கிறது: செய்யாத திருட்டுக்காக ரமேஷ் போலீசா ரால் துரத்தப் படுகிறான். ஒருபுறம், பிச்சுவா பக்கிரி இவன் உயிருக்கு விலை பேசுகிறான். மறுபுறம் ஜம்பு என்ற போக்கிரி இவனைக் கொல்வதற்காகப் பணத்தை வாரி இறைக்கிறான். பக்காத் திருடனான பிரகாஷ் ரமேஷுக்கு நண்பனாக நடிக்கிறான்.

யார் திருடன், யார் போலீஸ் அதிகாரி என்ப தெல்லாம் திரைக்கதையின் சஸ்பென்ஸுகள்! அலைகள் தீர்ந்ததும், உண்மைக் குற்றவாளி அகப் பட்டுக்கொள்ள, காதலர்கள் ஒன்றுசேர்கின்றனர்.

ரமேஷாக நடிக்கும் அசோகனுக்கு நிறைய சான்ஸ்! ஆடவும், பாடவும், ஓடவும், ஓடி ஒளியவும், ஒழிந்த நேரத்தில் காதல் புரியவும் அவருக்குச் சரி யாக இருக்கிறது. நன்றாக நடித்திருக்கிறார்.

டாக்ஸி டிரைவர் பாபுவாக வரும் தங்கவேலு மிகவும் வேடிக்கையாகப் பேசி, தமாஷாக நடிக்கிறார். இவர் இல்லாமல் கதையேயில்லை. மனோரமா வெறும் தமாஷ் நடிகையாக வராமல், வில்லனின் கையாளாக வந்து சிறப்பாய் நடித்திருக்கிறார்.

மணிமாலா, பணக்காரப் பெண் கீதாவாக வந்து எடுப்பான எழிலுடன் அசோகனோடு காதல் புரிகிறார்.

வில்லன் மனோகர், பிச்சுவா பக்கிரி என்னும் பொல்லாதவனாக வந்து, கடைசியில் இன்ஸ்பெக்ட ராக மாறுகிறார். மிகத் திறமையோடு நடிக்கிறார்.

சதா சிகரெட் புகை மண்டலத்தில் கம்பீரமாகத் தோன்றும் ஜெமினி கணேசன் பெரிய வில்லன் பாகம் ஏற்று அதிகமாகப் பேசாமல் அருமையாக நடித்திருக்கிறார். ஏழு பாடல்களில் ''மனம் எனும் மேடை மேலே'' என்னும் பாடல் நன்றாயிருக்கிறது.

இது ஒரு ஹிந்திப் படத்தின் தழுவல். மாடர்ன் தியேட்டர்ஸின் உரிமையாளரான காலஞ்சென்ற டி. ஆர். சுந்தரத்தின் மகன் ஆர். சுந்தரம் படத்தை டைரக்ட் செய்திருக்கிறார். திரைக்கதையில் பாராட்டக் கூடிய புதிய அம்சமாக எதுவும் இல்லாததால், சப்பென்று போய் விடுகிறது.

சேலம் மாடர்ன் தியேட்டர்ஸாரின் நூறாவது பட மான ''வல்லவனுக்கு வல்லவன்'' நூற்றுக்கு ஒன்றாகப் பாராட்டும்படியில்லை. நூற்றில் ஒன்றாகத் தான் இருக்கிறது. ●

---

❋ 'ஆறறிவு படைத்த மனிதனைவிட ஐந்தறிவு படைத்த மிருகம் எவ்வளவோ தேவலை' என்பது அறிஞர்கள் கண்ட முடிவு. 'தாயும் மகளும்' படத் தில் ஐந்தறிவு படைத்த குதிரை தன்மீது அமர்ந்த எஜமான் முதுகில் கத்தியால் குத்தப்பட்டுக் கீழே விழுந்ததும் உதவிக்கு ஆளை அழைத்துவர வேக மாக ஓடுகிறது. ஆடிப் பாடிக் களிக்கும் பெண்கள் குரல் கேட்டதும் மெதுவாகச் செல்கிறது: பாட்டு முடி யும் வரை அது காத்திருந்து, பாட்டு முடிந்ததுமே அருகில் சென்று, அத்தனை பெண்களில் கதாநாயகி யின் புடவையை மட்டுமே பிடித்து இழுத்து வந்து கதாநாயகனிடம் சேர்க்கிறது! பிறிதொரு சமயத் தில் கதாநாயகனிடம் கதாநாயகியை முட்டி மோதித் தள்ளிப் போய்க் காதலர்களை ஒன்று சேர்க் கிறது: அவர்கள் காதல் விளையாட்டுக்களைக் கண்டு அது வெட்கி நாணுகிறது! தேவர் படத்தில் குதிரை அழகாக நடிக்கக் கேட்பானேன்?

'தாயும் மகளும்' தலைப்பு சமூகக் கதைபோல் தொனித்தாலும் வழக்கமான ராஜாராணிக் கதை.

வல்ல நாட்டின் மன்னன் மாறவர்மன் நல்லவன். அவன் பின்னை அரசப்பன் கொடியவன். அவன் எல்லைப்புறக் காவலன் சோமையாவின் குடும்பத்துக்கு அழிவைத் தேடுகிறான். நல்லவனான மாறவர்மன் கள்வர் தலைவனால் கொல்லப்பட்டதும் அரசப்பன் அவனோடு கூட்டுச் சேர்ந்து கொட்டமடிக்கிறான்: சோமையா குடும்பத்தைச் சேர்ந்த வள்ளியைக் கவரப் பார்க்கிறான். கடைசியில் கொடியவர்கள் அழிவதும், வள்ளியைச் சோமையாவின் மகன் மருது மணப்பது மாகக் கதை சுபமாக முடிகிறது.

வள்ளியாகக் கே. ஆர். விஜயாவும், அவள் தாய் மரகதமாக எம். வி. ராஜம்மாவும் வந்து ஒரு சிறிது படத்துக்கு உயிரளிக்கின்றனர். கத்திச் சண்டைக்கும், குதிரையோட்டத்துக்குமே நடிப்பைவிட முக்கியத்துவம் அளித்துள்ள இந்தப் படத்தில் நீங்கள் எதிர்பார்த்த மாதிரியே கதை சுபமாக முடிந்து விடுகிறது. ஹிட்ச் காக் மாதிரி சஸ்பென்ஸ் அளித்து உங்களைத் திணற அடித்தால் அப்புறம் உங்கள் உடம்புக்கு ஆகுமா?



# 32. பகைவனுக்கு அருள்

வீரவாகு தேவர் சிறைக்கூடத்தினின்று ஆகாய வழியாகப் புறப்பட்டார். சூரபன்மனின் அரண்மனைக் கோபுரத்தைக் கண்டு அதன் அழகை வியந்தார். கோபுர வாயிலில் உக்கிரன் மாதூரன் முதலிய அரக்க வீரர்களும், நால்வகைச் சேனைகளும் காவல் காத்துக் கொண்டிருந்தனர். ஆகவேதான் வீரவாகு தேவர் நிலத்தில் நடந்து செல்லாமல் வான வழியே சென்று அவ்வரண்மனையைக் கண்டார். அது நவரத்தின மயமாக ஜொலித்தது. ராஜ சபையில் இரத்தினம், முத்து, பவளம், கோமேதகம்,



வைரம், இவற்றால் இழைத்து அணி செய்யப்பட்ட சிங்காதனத்தில் வீற்றிருந்தான் சூரபன்மன். அவனுக்கு மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலிய தெய்வ மாதர்கள் ஆலவட்டம் வீசிக் கொண்டிருந்தார்கள். சந்திரனும் சூரியனும் இரண்டு பக்கங்களிலும் குடைப் பிடித்து நின்றார்கள். அரம்பையர் நடனமாடிக் கொண்டிருந்தனர். வித்யாதரரும், கிந்நரரும் வீணை வாசித்துக்கொண்டிருந்தனர். துதிப் பாடகர்கள் பிரம்மை எய்தித் துதித்தனர். சூரபன்மனுடைய தலையிலே இரத்தின முடி ஒளிர்ந்தது. காதுகளில் குண்டலங்கள் ஆடின. உடலில் கலவைச் சாந்தின் மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. இடுப்பிலே பீதாம்பரம் அணிந்திருந்தான். அதில் உதரபந்தம் என்னும் அணியும் இருந்தது. மழைச் சூல் கொண்ட பெரிய கருமேகம் ஒன்று சந்தியா காலத்தில் நானாவித வர்ண விசித்திரங்களால் தன்னை அலங்கரித்துக் கொண்டிருப்பது போல் சூரபன்மன் வீற்றிருந்தான்.

சூரபன்மனுடைய அவையின் சிறப்பையும், அவன் பெருமையையும் கண்ட வீரவாகு தேவருக்கு அவனிடம் கௌரவ பக்தியும், இரக்கமும் ஏற்பட்டன. 'இந்த போக வாழ்வை யெல்லாம் பரமேசுவரனிடமிருந்து அல்லவா

# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்த வாரியார்

இவன் தவமியற்றிப் பெற்றிருக்கிறான்? பாவம்! தேவர்களைச் சிறை வைத்த ஒரு குற்றத்துக்காக இவ்வளவும் தொலையப் போகிறதே' என்று பரிதாபப் பட்டார். 'தூது செல்லும் நான் சூரபன்மனைத் திருத்த முயலுவேன். என்னுடைய சொல்லால் அவன் திருந்தவில்லையெனில் முருகப் பெருமானின் வேலினால்தான் திருந்துவான்' என்று எண்ணினார்.

புத்தியில்லாத தூக்கணாங் குருவியொன்று மரத்தில் கூடு கட்டி முட்டையிட்டது. அது முட்டையிடுவது ஓர் இடம்; குஞ்சு பொரிப்பது மற்றோரிடம்தான். குஞ்சு பொரிக்கும் இடத்துக்கு முட்டையை எடுத்துச் சென்றது குருவி. இரவில்

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்

அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும், சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டால்கம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

CB.6-21 TAM.

மாதக் குழந்தையும் இந்த வித்தையைச் செய்யும். நீ செய்தது என்ன பிரமாதமான செப்பிடி வித்தை! உன் உயிர் போவதற்கு முன்னே நீ யார் என்பதைச் சொல்லி விடு'' என்றான்.

''உரைசெய் இந்நகர் மகவிரும்
செய்வர், ஐன்முற்ருக்
கருவின் உள்ளுறு குழவியும்
செய்திடும் கருத்தில்
வரைகளும் சேயும் மாக்களும்
செய்யும் மற்று அதனுல்
அரியது அன்றரோ பேதைநீ
புரிந்திடும் ஆடல்!''

சூரபன்மன் தொடர்ந்து கூறுவான்: ''தேவேந்திரன் என்னைக் கண்டு பயந்து ஓடி விட்டான். பிரம்மா என்னுடைய திசைக்கே வரமாட்டார். நாராயணரோ திரும்பிக்கூடப் பார்க்க மாட்டார். எல்லோருக்கும் தலைவராகிய ஈசனே அடியவனாகிய என்னிடம் ஏன் கோபித்து வரப் போகிறார்? அப்படியிருக்க என் அரண்மனையில் பிரவேசித்துள்ள நீ யார்?'' என்று கேட்டான் சூரபன்மன்.

வீரவாகு தேவர் மறுமொழி சொல்வார்:

''புரந்தரன் குறை அயன்முதல்
அமரர் தம் புன்மை
வருந்தும் வானவர் சிறையெலாம்
நீக்கி மற்றவர் தம்
இருந்து தொல்லிறை உதவுவான்
செந்திமா நகர் வந்
திருந்த ஆதியம் பண்ணவன்
அடியனேன் யானே''

''தேவேந்திரன் குறை தீரும்பொருட்டும், தேவர்கள் சிறை மீளும் பொருட்டும் திருச்செந்தூர் வந்திருக்கின்ற ஆதிப் பரம்பொருளாக இருக்கின்றவரின் அடியவன் நான்'' என்று கூறினார் வீரவாகு தேவர்.

முருகவேளைப் போலவே வீரவாகு தேவரும் சிவகுமாரர்தான். 'சிவபெருமான் என்னிடம் பகைகொண்டு இங்கு வர மாட்டார்' என்று கூறிய சூரனிடம் வீரவாகு தாம் சிவகுமாரனே எனக் கூறி மரியாதை பெற்றிருக்கலாம்; அல்லது தம்மை முருகனின் தம்பி என்று பெருமையாகச் சொல்லி யிருக்கலாம். ஆயினும் பணிவின் உருவாக அண்ணனின் பணியில் வந்த வீரவாகு அவ்விதம் சொல்லவில்லை. 'ஆறுமுகனின் அடியேன்' என்றே சொல்கிறார். அண்ணனிடம் அவ்வளவு மரியாதை. அந்த விநயம்தான் இந்த நாட்டின் அடிப்படைப் பண்பு.

சூரபன்மன் ஆச்சரியமடைந்தான். ''முருகனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். தேவர்களுக்கு உதவி புரிய அவன் முயல்வதை அறிவேன். என் அருமைச் சோதரன் தாரகனை அவன் வதம் செய்ததாகவும் சொல்லப்படுகிறது. எனினும் அவன் சின்னஞ் சிறு பாலகன், பால் மணம் மாறுதவன் என்பதால் அவன்மீது போருக்குச் சென்றால் மாறுத பழி வருமே என்று விட்டு விட்டேன். நீ அவனுக்குத் தூதனு? வேண்டுமானுல் அந்தக் குழந்தையே என்னிடம் நேராக வந்திருக்கலாம். சரி வந்த விஷயம் என்ன? சொல்'' என்று கேட்டான் சூரபன்மன்.

சூரனின் பெருமையைக் கண்டு அவனது தவத்தை எண்ணி மகிழ்ந்த வீரவாகுவுக்கு அவனுடைய வாழ்வு முடியும் தருணம் வந்ததே என்று கருணை ஏற்பட்டது. கருணை ஏற்பட்டால் உள்ளத்தில் சகோதர பாவம் ஏற்படும். அவ்வாறே வீரவாகு தேவருக்கும் ஏற்பட்டது. உண்மையிலேயே உலகத்து உயிரினங்கள் அனைத்தும் உடன்பிறந்தவையே அன்றே? நல்லன கொடியன யாவும் உடன்பிறந்தவைதாம். இதையேதான் புராணங்கள் காசிபர் என்ற தத்துவமாக்கிக் காசிபருக்கே தேவர் அசுரர், மனிதர் மற்றும் எல்லா ஜீவ ராசிகளும் பிறந்தன என்கின்றன. இதை நினைந்து வீரவாகு சூரனிடம் அருளுடன் அறத்தைக் கூறிப் பேசலானார்.

(தொடரும்)

# ஜீவகீதம்

## ஜெகசிற்பியன்

### அத்தியாயம் 24

## பொய்யும் மெய்யும்

“ஏ, பாய்! மினி கிட்டே பணம் வாங்கிக்கிட்டுப் போய் ஆட்டோ ரிக்‌ஷாக்காரனுக்கு மீட்டரைப் பார்த்துக் கொடுத்து அனுப்பு மேன்!'' என்று அமர்த்தலாக உத்தரவிட்ட நச்சி, குஷியாக விசில் அடித்தவாறு ரோஸியின் வீட்டில் நுழைந்தான்.

''ஹலோ, மை டியர் பாய்! ஹௌ ஆர் யூ?'' என்று ஆட்டங் கண்ட மெலிந்த குரலில் கேட்டுக் கொண்டே வேர்க்கடலையைக் கொறித்தபடி வந்து வரவேற்றாள் கிழவி மினி.

'இன்னுடாது, சகுனம் சரியில்லாம இருக்குது' என்று தனக்குள் முனகிக் கொண்ட நச்சி, ''ஐ ஆம் கொய்ட் வெல், பாட்டி! எங்கே உன் டாட்டரைக் காணோம்? டான்ஸ் ஆடப் போயிட்டாளா?'' என்று கேட்டான்.

''நோ, நோ, பாய்! அதெல்லாம் எனக்குத் தெரியாது; தெரிஞ்சுக்கிறதும் மானர்ஸ் இல்லே!''

'' அப்படியா?... சரி, பாட்டி! அவள் வந்தா, டிஞ்சரும், பாண்டேஜூம் தயாராக எடுத்து வைக்கச் சொல்லு; நான் அப்புறமா வர்றேன்.''

''ஓ... என்ன மேன், பயமுறுத்தறே?.... கோவிச்சுக்காதே!... சிட்டவுன், பிளீஸ்!''

''எனக்கு ரொம்பப் பிஸி இருக்குது மினியம்மா ! நான் புறப்படறேன்.''

''வெயிட் ஏ மினிட், நாச்! டீ குடிச்சுக்கோ! கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கோ! அப்புறம் போய்க்கோ!'' என்று பரிவுடன் கூறி நச்சியின் மோவாயைத் தடவிய கிழவி மினி, ''யூ ஆர் ஏ வெரி நைஸ் ஃபெல்லோ! ஸ்வீட் பாய்!'' என்று வாயில் 'சொள்' ஒழுகப் பாராட்டியவள், ''நீ என்ன மேன், ஒரு நாள்கூட என்னோடு டான்ஸ் ஆட மாட்டேங்கிறே? இப்ப கொஞ்ச நேரம் ஆடலாம், வர்றியா?'' என்று குமரிச் சிரிப்புடன் குழைவாகக் கேட்டாள்.

'ஆங், படா திமிர் புடிச்ச கெழவிதான் போலிருக்குது' என்று வாய்க்குள்ளாகவே கறுவிக்கொண்ட நச்சி, ''இருக்கட்டும், பாட்டி! இப்ப வேணாம். இன்னும் ஒரு நாப்பது வருசம் போவட்டும். அப்ப நாம ரெண்டு பேரும் ஜோடி சேர்ந்து டான்ஸ் ஆடலாம், இன்னா?'' என்று அவளிடம் பக்குவமாகக் கூறி நழுவிக் கொண்டு அங்கிருந்து கடுகடுப்புடன் புறப்படக் காலெடுத்தவன், ''ஷேம்! ஷேம்!'' என்ற கீச்சுக் குரலும், அதைத் தொடர்ந்து கலகலவென்ற சிரிப்பொலியும் கேட்டுச் சட்டெனத் திரும்பினான்.

பக்கத்து அறையிலிருந்து மகிழ்ச்சிக் குறுகுறுப்புடன் குதித்தோடி வந்த ரோஸியின், ''பார்த்தியா, மிஸ்டர் நாச்! உன்னை ஏமாத்திப்பிட்டேன்! 'டிரை' பண்ணி வைச்சுட்டேன்!'' என்றவாறு அவனது கரங்களைப் பற்றிக் கொண்டாள்.

நச்சி அவளை 'உர்'ரென்று ஒருகணம் கூர்ந்து பார்த்து விட்டுப் பிறகு மெல்லச் சிரித்தபடி, ''உள்ளேதான் இருக்கிறேன்னு எனக்குத் தெரியும் மினி! சும்மானுங்காட்டியும் அப்படி ஒரு கமாஸ் பண்ணினேன்; அதைப் பார்த்து நீதான் ஏமாந்துட்டே!'' என்றான்.

''ஓ, நீ பெரிய 'ரோக்' மேன்! கீழே விழுந்தாலும் மீசை மேலே மண் ஒட்டலேங்கிறே!'' என்று குலுங்கிச் சிரித்த ரோஸி அவனைச் சோபாவில் இழுத்து உட்கார வைத்து விட்டுத் தானும் அவன் அருகில் அமர்ந்து கொண்டாள்.

தன் மகள் வெளியே போயிருக்கிறாளா, உள்ளேதான் இருந்தாளா என்ற விவரம் உண்மையாகவே தெரியாதிருந்தவள் போல் அவளை வியப்புடன் பார்த்த கிழவி மினி தனக்குள் மெல்லத் தலையசைத்தவாறு, ''ஏ, பாய்!'' என்று குரல் கொடுத்தாள். உடனே பட்லர் ஓடி வந்து நின்றான். ''தெரு மேலே போய், த்ரீ பைவ் கேய்ங், த்ரீ பைன் வேர்க்கடலை வாங்கியா மேன்!'' என்று அவனுக்கு உத்தரவிட்டு விட்டு அமைதியாகத் திரும்பித் தன்னுடைய அறைக்குச் சென்று விட்டாள்.



''மிஸ்டர் நாச்! இன்னைக்கு நீ வருவேன்னு
ான் கொஞ்சமும் எக்ஸ்பெக்ட் பண்ணலே.
னக்கு ரொம்ப ஹாப்பியா இருக்குது. என்ன
ண்றதுன்னே தெரியலே'' என்று சிறுபிள்ளை
ோல் குதூகலத்துடன் சோபாவில் எம்பி ரெம்
பி குதித்தாள் ரோஸி.

''எனக்கும் அப்படித்தான் இருக்குது டியர்! வரியா டான்ஸ் ஆடலாம்?'' என்று எழுந்தா நச்சி.

''வேணாம், டார்லிங்! இப்ப நீ ரொம்ப டயா டா வந்திருப்பே. சாப்பிட்ட அப்புறம் ஆட ம்.''

''வேண்டான்னு, இன்னைக்கு என்னை இங்கேயே டிக்கா போடச் சொல்றியா?'' என்று கேட்டான் நச்சி.

வெட்கத்தால் கன்னங்கள் சிவக்க முகத்தை மூடிக் காண்டாள் ரோஸ்லின்.

''நீ சொல்றதும் சரிதான், மிஸி! இந்த வாரம் முச்சூடும் ஒரே பிஸி. ரொம்ப பேஜார் புடிச்ச வேலையாய்ப் போச்சு. அப்படியிப்படி நவுர முடியலே. உன்னைப் பார்க்காமலும் இருக்க முடியலே. அதான் கிளம்பி ஓடியாந்துட்டேன்'' என்று சலிப்புடன் சொன்ன நச்சி, ஸ்டைலாகச் சிக ரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான்.

ரோஸிக்கு இதைக் கேட்டதும் மகிழ்ச்சி கரை கடந்து போயிற்று. ''மை லவ்லி லிட்டில் பீக்!'' என்று கொஞ்சிக் குழைந்து அவனது கன்னத்தை வருடினாள் அவள்.

சிகரெட்டின் புகைச்சுருளில் பார்வையை மிதக்க விட்டபடி சோபாவில் சாய்ந்து கொண்டிருந்த நச்சி அப்போதுதான் ஏதோ நினைவு வரப் பெற்றவன் போல் நிமிர்ந்து. ''எங்கே நம்ம அஸிஸ்டென்டைக்காணோம்?'' என்றவாறு வராந்தாப் பக்கம் எட்டிப் பார்த்து விட்டு, ''இன்னுப்பா, நீ இன்னும் வெளியே நிக்கிறே? ஐ ஆம் ஸோ ஸாரி! கம் இன், கம் இன்!'' என்றான் வெகு அமர்த்தலாக.

இந்நேரம் வரையில் வராந்தாவிலே கிலிலும் திகைப்புமாக ஒதுங்கி நின்று கொண்டிருந்த சபேசன் தயங்கித் தயங்கி உள்ளே வந்தான்.

''உட்காரு, பிரதர்! சும்மா உட்காரு. நம்ப ஊடுதான்!'' என்றான் நச்சி புன்முறுவ

ளுடன். ரோஸியும், "டேக் யுவர் ஸீட், மிஸ்டர்!" என்று சாதாரணமாகச் சொல்லி விட்டு அவன் முகத்தை ஒரு கணம் கூர்ந்து நோக்கினாள். 'இவனை எங்கோ எப்போதோ பார்த்திருக்கிறோமே' என்பதுபோல் அவளது புருவங்கள் நெளிந்தன. ஆனால் சபேசன் அவளைப் பார்த்ததுமே தெரிந்து கொண்டான், 'அன்றொரு நாள் ரிப்பன் மாளிகையருகில் நச்சியிடம் பேசி விட்டுப் போன அந்தப் பரங்கிக் காரிதான் இவள்' என்று.

"என்ன மிஸ்டர் நாச்! இந்த ஜென்டில் மேன் யாரு?" என்று இரகசியக் குரலில் வினவினாள் ரோஸி.

"இவன் என்னோட அஸிஸ்டென்ட், மிஸி!" என்றான் நச்சி பெருமையுடன்.

சபேசனைத் திரும்பிப் பார்த்த ரோஸி, "நீயே அஸிஸ்டென்ட் மியூஸிக் டைரக்டர்னு தானே முந்தி சொன்னே? உனக்கு ஓர் அஸிஸ்டென்டா?" என்று கேட்டபடியே நகைத்தாள்.

"அடங்க, இஸ்ஸி! உனக்கு இன்னும் அந்த விஷயம் தெரியாதா?" என்று அலட்சியமாகச் சிரித்த நச்சி உற்சாகமான குரலில் சொன்னான்: "இப்ப நான் அஸிஸ்டென்ட் மியூஸிக் டைரக்டர் இல்லே கண்ணு! ஸினி ஸாங் கம்போஸர்!"

"ஓ.... நௌ யூ ஆர் எ போயட்?"

"போயட்டாவது! காயட்டாவது! அதெல்லாம் எனக்குத் தெரியாது. ஸினிமாப் படங்களுக்குப் பாட்டுப்



போட்டுக் கொடுக்கிற வேலை பார்க்கிறேன். அவ்வளவுதான்.''

தனது மர வர்ணக் கண்களை அகல மலர்த்தி அவனை ஆச்சரியத்துடன் நோக்கிய ரோஸி, ''மிஸ்டர் நாச்! ஸாங் கம்போஸ் பண்றது அத்தனை ஈஸி ஜோக் இல்லை; நீ லை பேசறே! இதை என்னால் பிலீவ் பண்ண முடியாது!'' என்று தலையை வேகமாக ஆட்டினாள்.

''அட யார்ரவ, எதைச் சொன்னாலும் லை லையிங்கிறே!'' என்று அலுத்துக்கொண்ட நச்சி, ''மெய்தான், மிஸி! முந்தி பாட்டுக்கு மெட்டுப் போட்டுக்கிட்டு இருந்தேன். இப்ப மெட்டுக்குப் பாட்டுப் போடறேன். இதிலே இன்னா கஸ்டம்? சந்தேகமிருந்தா கேளு. இப்பவே ஒரு பாட்டுப் போட்டுப் பாடிக் காட்டுறேன்'' என்றவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு பாடவே ஆரம்பித்து விட்டான்: ''ஹொய், ஹொய், ஹாய்ய்! சாலையிலே ரெண்டு பேரு, சல்பேட்டா போட்டுக்கினு, சங்கீத நடை நடந்து போறாங்க!.... ஹொய், ஹொய், ஹொய்ய்.....!''

ரோஸிக்கு ஒரே சிரிப்பு. அவள் கைகொட்டிக் கலகலவெனச் சிரித்தாள். சபேசனாலும் சிரிப்பை அடக்க முடியவில்லை.

''கேட்டியா மிஸி, இப்ப இன்னா சொல்றே?'' என்று சிரிக்காமல் கேட்ட நச்சி, மேலும் உற்சாகமாகக் கூறினான்: ''மியூஸிக் கம்போஸரா யிருந்தவன் எப்படி ஸாங் கம்போஸ ரானேன்னு நினைக்கிறயா? அந்தத் தமாஷைக் கேளு: போன வாரம் எங்க மியூஸிக் டைரக்டருக்கு ஒரு ட்யூன் கம்போஸ் பண்ணிக் கொடுத்தேன். அதை டேப் ஸாங்கா ரெக்கார்டு செய்துடச் சொல்லிப் புரொடியூஸர் அர்ஜெண்ட் படுத்தினான். வாத்தியக்காரங்களை யெல்லாம் 'செட்' பண்ணி வைச்சுக்கிட்டு, பாட்டுப் போடறவனை எதிர்பார்த்தோம். அவன் இன்னாடான்னா, 'கார் அனுப்பினாத்தான் வருவேன்'னு மக்கார் பண்ணிப்பிட்டான். பாவம், பஸ்ஸில் வரக் காசு இருந்திருக்காது. அதை வெளியே சொல்லிக்குவானா? மியூஸிக் டைரக்டருக்கும் புரொடியூஸருக்கும் ரொம்பக் கோவம் வந்துடுச்சு. 'டேய், நச்சி! நீயே ஒரு பாட்டுப் போடுடா'ன்னு சொன்னான் பட முதலாளி. நானா ஜகா வாங்குவேன்? அங்கேயே காயிதம் பேனாவை எடுத்தேன். உடனே எனக்கு 'மூடு' கிளப்பிக்கிச்சு: சும்மா சுபசுபன்னு எழுதித் தள்ளிப்பிட்டேன். பாட்டைப் படிச்சுப் பார்த்த எல்லாரும் அப்படியே 'சுந்த்'தாயிட்டாங்க. அன்னையிலிருந்து நான் மெட்டுப் போடறதை விட்டுப் பிட்டு, பாட்டுப் போடறவனாயிட்டேன். இதுக்குள்ளாற இருவது படத்துக்குப் 'புக்' ஆயிடுச்சு. இப்ப தினத்துக்கு என் பங்களா வாசல்லே புரொடியூஸருங்க வந்து, 'க்யூ'விலே நிக்கிறானுங்க. ரொம்ப பேஜார் புடிச்ச வேலையாப் போச்சு, போ!''

''ஓ..... நீ பெரிய ஆளு, டியர்! ரொம்பப் பெரிய ஆளு!'' என்று மகிழ்ச்சிக் கேவலுடன் கூறிக்கொண்டே அவன் தோளில் சாய்ந்த ரோஸி, ''ஆமாம்; நீதான் போயட்டாயிட்டியே, உனக்கு என்னாத்துக்கு அஸிஸ்டெண்ட்?'' என்று கேட்டாள்.

''அப்படிக் கேளு, மிஸி! நான் பேனாவை எடுத்து எழுதறதில்லே. அப்படி எழுதினா அது ஒரு பாட்டோடு நிக்காது: பெரிய ராமாயணம் மாதிரி நீண்டு போயிடும். அதுக்குப் பயந்துகிட்டு சும்மா வாயாலே மட்டும் டிக்டேட் பண்ணுவேன்: பின்னாடி ஒருத்தன் நின்னு அதை எழுதிக்கணும். அந்த வேலைக்குத்தான் இவனை வைச்சுக்கிட்டு இருக்கிறேன்.''

ரோஸி அவனை வியப்புடன் பார்த்தாள். உற்சாகமடைந்த நச்சி மேலும் சொன்னான்: ''சில சமயம் எனக்கு 'மூடு' வராது. அப்ப என் ஐடியாவை மட்டும் சொல்லுவேன். அதை இவன் அப்படியே பாட்டா எழுதிப்பிடுவான். பார்க்கிறதுக்கு என்னமோ மாதிரி இருக்கிறானேன்னு நினைக்கிறயா? என்னைப்போலப் பெரிய ஆளுதான். ஏமாந்தா இவனே பாட்டுப் போட ஆரம்பிச்சுடுவான்.''

நச்சி தன் மனம் போனபடியெல்லாம் கயிறு திரிப்பதைக் கேட்கச் சகிக்காமல் அங்கிருந்து மெல்ல நழுவி வராந்தாப் பக்கம் போய் விட்டான் சபேசன்.

''என்னா டார்லிங், அந்த ஜென்டில்மேனுக்கு ஸீட் கொடுத்து உட்காரச் சொன்னா, வெளியே போயிட்டானே?'' என்று மிகுந்த மனக் குறையுடன் வினவினாள் ரோஸி.

''அவன் என்னோட சிஷ்யப்பிள்ளை இல்லையா? குருவுக்கு எதிரிலே உக்கார அச்சப்படறான்!'' என்று சொல்லி நகைத்தான் நச்சி.

ஏதோ யோசனையுடன் மௌனமாயிருந்த ரோஸி, ''அது சரி, மிஸ்டர் நாச்! அந்த ஆளை இங்கே என்னாத்

துக்கு அழைச்சுக்கிட்டு வந்தே?'' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு கேட்டாள்.

''அதனுலே நமக்கு எதனுச்சும் டிஸ்டர்பா யிருக்குமோன்னு நினைக் கிறயா - மினி? வொர்ரி பண்ணிக் காதே! நம்ம இஷ்டத்துக்கு ஆட லாம், பாடலாம்; அதையெல்லாம் அவன் கண்டுக்க மாட்டான். ரொம்ப மானர்ஸ் தெரிஞ்ச பையன்'' என்று அவளுக்குத் தைரியம் சொன்ன நச்சி தொடர்ந்து கூறினுன்: ''அவனே எதுக்கு இங்கே கூட்டியாந்தேன்னு. ஒரு படத்துக்கு அர்ஜெண்டா ரெண்டு பாட்டுப் போட்டுக் கொடுக்க வேண்டி யிருக்குது. ஐடியா கொடுத்து அதைப் பாட்டா எழுதச் சொன்னேன். அவ னுக்கு என்னமோ 'மூடே' வரலை யாம். 'பெங்களூர் போவணும், பாண்டிச்சேரி போவணும்' என்கிறுன். அதுக்கெல்லாம் பணம் யாரு கொடுக் கிறது? எங்க புரொடியூஸர் ஊரில் இல்லே; ஊடு வாசலை வித்துப் பணம் கொண்டாரப் போயிருக்கிறுன். ஓட் டல்லே ரூம் எடுத்துக் கொடுக்க லாம்னு பார்த்தால், எங்கேயும் ரூம் காலி இல்லே. அவனுக்குப் பெரிய ஓட்டலாத்தான் இருக்கணும்; அமிஞ்சி யிலே யெல்லாம் தங்க மாட்டான். இன்னு பண்றது? அதான் இங்கே அழைச்சாந்துட்டேன். ஒரு ரெண்டு மூணு வாரத்துக்கு அவன் ராத்திரி யிலே படுக்க மட்டும் உன் வீட்டில் எங்கனுச்சும் ஓர் இடத்தை ஒழிச்சுக் கொடு. அவனுலே உனக்கு ஒண்ணும் கஷ்டம் வராது. அதுக்கு நான் கியாரண்டி. பையன் ரொம்ப நல்ல வன். பகலில் இங்கே தங்க மாட் டான். ராத்திரியிலே படுக்க மாத்திரம் தான் வருவான். ஏன்னு, ராவு வேளையிலேதான் அவனுக்கு 'மூடு' வரும். எழுந்திருச்சு எழுத ஆரம்பிச்சுடு வான். எந்த இடத்தைக் கொடுக்கிற துன்னு 'திங்' பண்றியா? பொழக்கடை வராந்தாவிலே இடம் கொடுத்தாக்கூடப் போதும்; படுத்துக்குவான்.''

''எல்லாம் சரிதான், டார்லிங்!.... பட், என்னோட மம்மி இதை அக்- செப்ட் பண்ணுவாளோ, என்னமோ!''

''அவளுக்கு லேர்க்களுனே, கேம்ங் வாங்கிக் கொடுத்து நான் சரிப்படுத்திக்க றேன்! நீ இன்னு சொல்றே?''

''அப்படீன்னு, உன் அஸிஸ்டெண்ட் இங்கே லாங்ஸ் க்ம்போஸ் பண்ணிப் பிட்டானுன்னு பார்க்கிறதுக்காக நீ டெய்லி வருவே இல்லையா, டார்லிங்?''

''பின்னே, வந்துதானே ஆவணும்? அதுக்குத்தானே இந்த அரேஞ்ச மெண்டைப் பண்ணியிருக்கிறேன்!''

ரோஸி இதைக் கேட்டு மிகவும் திருப்தியடைந்தவளாய் நச்சியின் கழுத் தைத் தன் அழகிய வெண்ணிறக் கரங்க ளால் வளைத்துக் கொண்டு, சொன்னுள்: ''இங்கே பாரு, மிஸ்டர் நாச்! நீ இப்ப சொன்னதையெல்லாம் நான் 'பிலீவ்' பண்ணிப்பிட்டேன்னு நினைச்சுக்காதே! பட், உனக்காக அதையெல்லாம் 'பிலீவ்' பண்ணுகிறேன். அதனுலே எனக்கு ஒண்ணும் 'லாஸ்' வரப் போறதில்லே. ஐ வான்ட், ஒன்லி யுவர் ஹார்ட்! தட்ஸ் ஆல்!''

திருதிருவென விழித்த நச்சி, ''இன்னு மினி, என்னென்னமோ சொல்றே? எனக்கு ஒண்ணுமே புரிய லையே!'' என்றுன் அசட்டுச் சிரிப்புடன்.

''டிட் யூ நாட் அண்டர்ஸ்டாண்ட்? லீவ் இட்!'' என்று குறும்பாக முறுவ லித்த ரோஸி, ''சரி, டார்லிங்! சாப்பிடப் போவலாம், வா! உன் அஸிஸ்டெண்டையும் கூப்பிட்டுக்கோ!'' என்றவாறு எழுந்தாள். (தொடரும்)

# பொழுது போக்கத் தபால் தலை!

கிடைத்தற்கரிய சிறப்புமிக்க தபால் தலைகளை ஆயிரக் கணக்கில் அரும்பாடு பட்டுச் சேர்த்து, அவற்றைக் கருத்துவாரியாகத் தொகுத்துப் பல அற்புதமான கண்காட்சிகளை நடத்திப் பெயரும் புகழும் பெற்றிருப்பவர் சுப்புலட்சுமி. இவருடைய விலை மதிப்பற்ற தபால் தலைகளையும், அவைகளைக் கருத்துச் செறிந்த தலைப்புக்களுடன் அவர் தொகுத்திருப்பதையும் பார்த்து அதிசயித்தவர்கள் பலர்; பொறாமை கொண்டவர்களும் பலர்.

ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி அவர்கள் சேலம் ராமஸ்வாமி ஐயரவர்களின் ஏக புத்திரி. இரண்டு மூன்று ஆண்களுக்கிடையே ஒரு பெண் குழந்தையான காரணத்தால் எல்லாச் சலுகைகளும் பெற்று வளர்ந்த இவர் சங்கீதத்திலும், பூத்தையல் வேலையிலும் மிகுந்த ஆர்வம் காட்டினார். அருமைப் பெற்றோர் தம் செல்விக்குச் சிறந்த முறையில் சங்கீதம் சொல்லி வைத்தார்கள். எழும்பூர் ஜகந்நாத பக்த சபையில் ஸ்வாதித் திருநாள் தினத்தன்று பிரமிக்கும் வகையில் அமர்க்களமாகக் கச்சேரி பண்ணிச் சபையோரின் பாராட்டுதலைத் தட்டிக் கொண்டு போய் விட்டார்.

மிகவும் இளம் வயதிலேயே திருமணம் முடிந்து பெயர் பெற்ற பாங்கி யொன்றில் பெரிய அதிகாரியாக விளங்கும் திரு சுப்பிரமணியம் அவர்களின் மனைவிளக்காகத் திகழும் சுப்புலட்சுமி, சுமார் இருபது வருஷங்களாகப் பம்பாய்வாசியாக இருக்கிறார். பம்பாய்க் கலையுலகுடனும் இலக்கியச் சங்கங்களுடனும் அவருக்கு நெருங்கிய தொடர்புண்டு.



எந்த ஒரு தொழிலையும் கலைக் கண்களுடன் நோக்கி, அந்தத் தொழிலில் நுட்பமாக மறைந்திருக்கும் அழகை, மற்றையோருக்கு எடுத்துக்காட்டி, அவ்வழகைத் தானும் ரஸித்து ஏனையோரையும் ரசிக்கச் செய்வதில் ஸ்ரீமதி சுப்புலட்சுமிக்கு இணை அவரேதான். குடும்ப நிர்வாகம், பொம்மைகள் சேகரித்தல், மேடைப் பேச்சு இவையெல்லாம் இவருக்குத் தண்ணீர் பட்டபாடு.

இவருடைய முதல் தபால்தலைக் கண்காட்சி அக்டோபர் 1956ல் தேனு பாங்கு ஹாலில் திரு எஸ். கே. பாட்டீல் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இரண்டாவது காட்சி, ஜே. ஜே. கலைப் பள்ளியில் 1957ல் திரு ருத்தலிக்கர் அவர்களால் திறக்கப்பட்டது. மிகச் சிறப்பாக அமைந்த அவ்விரு கண்காட்சிகளையும் ஆயிரக்கணக்கானவர்கள் பார்த்துப் புகழ்ந்து பாராட்டினார்கள். முதலில் ஒரு பொழுது போக்காக ஸ்ரீமதி சுப்புலட்சுமி ஆரம்பித்த இந்தக் கலை ஒரு மாபெரும் தொண்டாகவே மாறி, இப்பொழுது இந்தியாவில் மட்டுமேயன்றி உலகில் பல பாகங்களிலும் இவருடைய புகழைப் பரவச் செய்திருக்கிறது.

எத்தனையோ தபால் தலைக் காட்சிகளை அதற்குப் பின் நடத்திவிட்ட ஸ்ரீமதி சுப்புலட்சுமி, தம்முடைய மிகச் சிறந்த சாதனையாகக் கருதுவது, 1957 நவம்பர் 14ந் தேதி தபால் தந்தி இலாகாவின் ஆதரவில் புது தில்லியில் நடந்த அவருடைய கண்காட்சியைத்தான். மேற்படி காட்சிக்கு நேருஜி இரண்டு முறை விஜயம் செய்து ஸ்ரீமதி சுப்புலட்சுமியை வெகுவாகப் புகழ்ந்ததுடன், இக்கண்காட்சி இந்தியா முழுவதுமின்றி, உலக முழுதும் காண்பிக்கக் கூடிய அவ்வளவு சிறப்பும் கருத்துச் செறிவும் நிறைந்ததா யிருப்பதாகப் பாராட்டினார். அது மட்டுமா? பன்னிரண்டு நாட்கள் தொடர்ச்சியாக நடந்த இக்காட்சியை ராஜன் பாபு வந்து பார்ப்பதற்காக இன்னும் ஒன்றிரண்டு தினங்கள் கூட நீடித்து நடத்தும்படியாகக் கூறிச் சென்றார். அதன்படியே மறுதினம் ராஜன்பாபு வந்து தபால் தலைக் கண்காட்சியைப் பார்த்துவிட்டு ஸ்ரீமதி சுப்புலட்சுமியின் சிறப்புமிக்க இக்கலைத் தொண்டினைப் புகழ்ந்து பாராட்டி ஆசிர்வதித்துச் சென்றார்கள். ஆனால் நேருஜி கூறியபடி இக்கண்காட்சியை வேறு பல இடங்களிலும் காண்பிக்கத் தபால் தந்தி இலாகா அதிகாரிகள் இன்றளவும் ஒருவிதமான முயற்சியும் எடுத்துக் கொள்ளாதது பற்றி ஸ்ரீமதி சுப்புலட்சுமி வருத்தப்பட்டார்.

பம்பாய் பாரதி கலாமன்றம், தென்னிந்திய நன்னலம் பள்ளி, இந்தோ அமெரிக்கன் ஸொஸைட்டி ஆகிய இடங்களிலெல்லாம் ஸ்ரீமதி சுப்புலட்சுமியின் தபால் தலைக் கண்காட்சி தொடர்ச்சியாக நடந்து, பம்பாய்வாசிகளிடையேயும், மற்றைய உலகப் பெரு நகரங்களிலும் அவருடைய புகழ் விளக்கின் ஒளியைப் பிரகாசிக்கச் செய்திருக்கிறது. சுமார் ஐம்பது தலைப்புக்களில் அவருடைய தபால் தலைகள் தொகுக்கப்பட்டு, ஒவ்வொரு தலைப்புக்கும் ஏற்றபடி ஒவ்வொரு வண்ணப் பட்டுத் துணியும் ஆங்கிலத்திலும், தமிழிலும் ஆழ்ந்த சிந்தனைச் செறிவுடைய ஒவ்வொரு பொன்மொழியையும் தாங்கி, அழகாகவும், கலையழகுடனும் ஆல்பங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றன.







தபால் தலைகளில் எழுத்தாளர்கள்
தபால் தலைகளில் ஓவியர்கள்
தபால் தலைகளில் விளையாட்டுக்கள்

என்பதாக விதம் விதமான தலைப்புக்களில், கண்ணைக் கவர்ந்து, கருத்தையும் சிந்தனையையும் தூண்டும் விதத்தில் பல வர்ணங்களில் திகழும் தபால் தலைகளைச் சேகரிக்க ஆரம் பித்ததிலிருந்து பல நாடுகளைப் பற்றிய பல விவரங்களைத் நாம் தெரிந்து கொண்டிருப்பதாகக் கூறுகிறார் ஸ்ரீமதி சுப்பு லட்சுமி. சரித்திரம் பூகோளம், விஞ்ஞானம், வைத்தியம் ஆகிய ஒவ்வொரு தலைப்பிலும் தொகுதிவாரியாக ஆல்பங் களில் அமைக்கப்பட்டிருக்கும் இவ்வழகிய தபால் தலைகளுக் காக, அவர் ஆயிரக்கணக்கான ரூபாய் செலவு செய்து அவற்றை வாங்கி விருக்கிறார். இப்பொழுதெல்லாம் உலகில் பல தேசங்களிலுமிருக்கும் பேனா நண்பர்களிடமிருந்து அவற் றைப் பெறுகிறார். அவருடைய கணவரான திரு சுப்பிர மணியம் தமக்கு உலகின் பல நாடுகளிலிருந்தும் வரும் கடிதங்களிலிருந்து அரிய தபால் தலைகளைச் சேகரித்துத் தம் மனைவிக்குக் கொடுத்து அழகிய ஆல்பங்களையும் தயாரித்து, ஈடு இணையற்ற இந்த அருங்கலை முயற்சியில் அவருக்குப் பல விதத்திலும் ஊக்கமும் உதவியும் அளிக்கிறார்.

சென்னையில் அமெரிக்க ஐக்கிய நாட்டுச் செய்தி நிலயத் தின் ஆதரவில் பன்னிரண்டு நாட்கள் தொடர்ந்து நடந்த ஸ்ரீமதி சுப்புலட்சுமியின் தபால் தலைக் கண்காட்சி கல்லூரி மாணவ மாணவி களையும், பெரிய உத்தியோகஸ்தர்களை யும் கவர்ந்து விட்டது. எல்லாவற்றை யும்விடச் சென்னையில் உள்ள பெரிய வீட்டு அம்மாமிகளையும் மூக்கில் விரல் வைத்து அதிசயிக்கும்படியாகச் செய்த தற்குக் காரணம் என்ன தெரியுமா? நல்ல பண வசதி உடையவராயிருந்தும், ஸ்ரீமதி சுப்புலட்சுமி நாகரிகமான பொழுதுபோக்குக்களான சீட்டாட்டத் திலோ, 'ஷாப்பிங்'கிலோ ஈடுபடாமல் வெறும் தபால் தலைகளைச் சேகரிக்கும் ஒரு விநோதமான பொழுது போக்கில் ஈடுபட்டிருக்கிறாரே என்பதுதான்.



ஜனவரி 1965 — பிப்ரவரி முதல் வாரம் முடிய பம்பாயில் "தபால் தலை களில் விளையாட்டுக்கள்" என்னும் தலைப்பில் மிகச் சிறப்பாக நடந்த சுப்புலட்சுமியின் கண்காட்சியைச் சிறந்த கிரிக்கெட் வீரர் விஜய் மெர்ச்சண்ட் அவர்கள் திறந்து வைத்தார்கள். ஸ்ரீமதி சுப்புலட்சுமியை அவர் மிகப் பாராட் டிப் பேசுகையில், தென்னிந்தியப் பழம் பெருங்குடிப் பெண்மணி யொருவர் இந்தக் கலையில் இவ்வளவு ஆர்வத்துடன் ஈடுபட்டுப் பிரமிக்கத்தக்க முறையில் கண்காட்சிகளையும் நடத்தி வருவது பெரியதோர் அற்புதமான சாதனையென்று கூறினார்.



ஸ்ரீமதி சுப்புலட்சுமியின் பெயர் இப்பொழுது உலகில் உள்ள தபால் தலைக் கலைஞர்களுக்கெல்லாம் மிக நன்றாகத் தெரியும். உலகின் பல பாகங்களிலும் உள்ள தபால் தலைச் சங்கங்களிலெல்லாம் அவர் அங்கத்தினராக இருக்கிறார். பல அகில உலகத் தபால் தலைக் கண்காட்சிகளில் பங்கெடுத்துக் கொண்டு, போலந்து, செக்கோஸ்லவேகியா, ஸ்பெயின், ஆர்ஜெண்டினா ஆகிய இடங்களிலிருந்து பலதகுதிப் பத்திரங்கள் பெற்றிருக்கிறார். அண்மையில் பம்பாயில் நடந்த அவரது தபால் தலைத் தொகுப்புக்களே மிகச் சிறந்தவை எனக் கருதப் பட்டமையால், அதற்குரிய முதற் பரிசான பொன் முலாம் பதக்கத்தை மகாராஷ்டிர கவர்னர் டாக்டர் செரியன் அவருக்கு வழங்கினார்.

— வேங்கடலக்ஷ்மி













ஒரு வக்கீல் இன்னொரு வக்கீலிடம்: "என்ன சார், இந்தத் தொழில்? இதைத் தலை முழுகி விடலாம் என்றிருக்கிறேன்."

"அப்படியானால் நானும் தலை முழுகிவிட வேண்டியது தான்...!"

"ஏன், உங்களுக்கு என்ன குறை?"

"நீங்கள் போய் விட்டால், சுலபமாக நான் கேஸில் ஜெயித்துக் கொண்டிருப்பதும் போய் விடுமே!"











சொஜ்ஜி. பஜ்ஜி. ஸஜ்ஜி



வாழ்க்கையைப் பற்றி நினைக்க வேண்டிய நேரத்தில் அவர் அதைத் திரும்பிப் பார்க்கவேயில்லை. இப்போது யாரும் (அதாவது பெண்கள்) அவரைத் திரும்பிப் பார்ப்பதில்லை. அப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பம் கிட்டினால்...?

பெருமூச்சு விட்டார் சிதம்பரேசன்.

தோட்டத்துப் பக்கம் அவரது பார்வை தாவிற்று. பிறகு மெள்ள மெள்ள எதிர் வீட்டுப் பக்கம் நகர்ந்தது.

நாலைந்து நாட்களாய் அவர் தயங்கித் தயங்கி எதிர் வீட்டைப் பார்க்கிறார். அங்கே ஒரு பெண் (அல்லது பெண்மணி) புதிதாகக் குடிவந்திருக்கிறதாகத் தெரிகிறது. அவள் மட்டும் தனியாகத்தான் இருக்கிறாள். அதாவது ஒரு சமையற்காரக் கிழவியைத் தவிர — என்பதும் தெரிகிறது. மேலும் ஊகம் செய்துகொண்ட தகவல்:

அந்த எதிர் வீட்டுக்காரி எங்கோ உத்தியோகம் பார்க்கிறாள். அவளுக்கு இன்னமும் கல்யாணம் ஆகியிருக்காது. கவர்ச்சிகரமாக உடுத்திக் கொள்வதில் அவளுக்கு ஏகப்பட்ட ஆசை போலும்!

தினம் காலையிலும் மாலையிலும் இரண்டு தடவைகள் அவருடைய கண்களில் அவளுடைய உருவம் நிறையும். இன்று ஞாயிற்றுக்கிழமை. காலையில் அவள் எங்கும் போகவில்லை. ஒருகால் இப்போது எங்காவது புறப்படலாம்.

சிதம்பரேசன் கையிலிருந்த பத்திரிகையையும் தூரத்திலிருந்த எதிர் வீட்டு வாயிலையும் மாறி மாறிப் பார்த்தார்.

மணி நான்கு அடித்தது.

அதோ... அவள்தான். இத்தனை நேரம் எப்படியெல்லாம் சிந்தித்துத் தன்னை அழகு படுத்திக் கொண்டாளோ? சிதம்பரேசனின் ரசிக உள்ளம் அதன் கரை கடந்து தளும்பிற்று.

பார்க்காதது போலப் பார்த்தார் அவர். அவளுடைய பார்வை ஒரு கண நேரம் தம்முடைய அறைப் பக்கம் நாடியதைக் கண்டதும், 'இது நிஜம்தானா?' என்று தம்மையே சோதனைக்குள்ளாக்கிக் கொண்டார்.

அவள் படியிறங்கினாள். தெருவோடு வலதுபுறமோ இடது புறமோ திரும்பாமல் சாலையின் குறுக்கே நடந்து சிதம்பரேசனின் பங்களாவின் நுழை வாயிலை இதோ நெருங்கி விட்டாள்.

சிதம்பரேசனின் நெஞ்சுக்குள் நூறு 'நிஜம்தானா?' கேள்விகள். அவர் அவசரமாக எழுந்தார். திரை சஞ்சிகை கீழே விழுந்தது. அதைக் கண் மறைவாக ஒளித்து வைத்தார். இடது கை முன் வழுக்கையை நோக்கித் தாவிற்று. சட்டென்று அந்தக் கையை நிறுத்திவிட்டு மற்றொன்றால் பின்புறத்து மயிர்களையெல்லாம் முன் பக்கம் தள்ளி விட்டுக்கொண்டார்.

திறந்திருந்த அறைக் கதவின் மீது மெல்லிய தட்டல்கள்.

“வாருங்கள்! வாருங்கள்!”

அவள் உள்ளேயே வந்து விட்டாள்.

முகம் நிறைய அள்ளிக் கொண்டு வந்திருந்த மலர்ச்சியை அறை முழுவதும் சிந்தினாள் அவள்.

“நான் எதிர் வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருக்கிறேன்...”

“ஓகோ!”

“நான் மட்டும் தனியாக இருக்கிறேன். பேச்சுக்குக்கூட யாரும் இல்லை. ஞாயிற்றுக்கிழமை. பொழுதே போகவில்லை...”

“ஓகோ, அப்படியா?”

“உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன் நிறைய. நேரில் பார்த்துப் பேச வேண்டுமென்று ஆசை....”

“ஓ! உட்காருங்களேன்.”

“உங்களுக்குச் சிரமம் ஒன்றுமில்லையே என்றால்? நீங்கள் ஏதாவது படித்துக்கொண்டிருப்பீர்கள்.”

“அதெல்லாம் இல்லை. எனக்கும்தான் பொழுது போகவில்லை.”

அவள் நன்றியைப் பார்வையாலும் தனது அழகான உதடுகளாலும் சொல்லிக்கொண்டு அமர்ந்தாள். சிதம்பரேசன் மிக அருகில் கிடந்த நாற்காலியில் உட்கார நினைத்தாலும் சற்றுத் தள்ளியே வேறோர் ஆசனத்தில் கட்டுக்கடங்காத தமது உடலை இருத்திக் கொண்டார்.

அறை முழுவதும் ரம்மியமான மணம் சூழ்ந்து கொண்டது.

அவள் கொஞ்சம் கூடத் தயக்கம் இல்லாமல் அறை முழுவதும் நோட்டமிட்டுக் கொண்டிருக்க, அவர் நிமிர்ந்து நேராய் அவளைப் பார்க்கத் தயங்கினார்.

“உங்களைப் பற்றி நிறையக் கேள்விப் பட்டிருக்கிறேன். உங்களுடைய ஆராய்ச்சி நூல்கள் அத்தனையும் பார்த்திருக்கிறேன். மாணவர்களிடம் உங்களுக்குள்ள செல்வாக்கு, ஆராய்ச்சியில் உங்களுக்குள்ள ஆவல்...”

அவள் பேசிக் கொண்டே போனாள். சிதம்பரேசன் தாங்க முடியாத தவிப்போடு கேட்டுக் கொண்டார். 'ஆராய்ச்சியாவது மண்ணாங்கட்டியாவது? உண்மையைச் சொல்லிவிடு!' என்று கதறியது மனம்.

மேலாகத் தலையை நிமிர்த்தி அவள் முகத்தைப் பார்த்தார்.

அவரிடம் கொண்ட பெரு மதிப்பைப் போற்றும் பாவம் அதில் நிரம்பித் தேங்கியிருப்பதாகத் தோன்றியது. அவ்வளவுதான்; தொண்டை வரை வந்து சொற்களாகப் பிறவி எடுக்கத் துடித்த தம் மனக் குறையை மறுபடியும் இதயத்துக்குள்ளேயே தள்ளித் திணித்தார் சிதம்பரேசன். இவளுடைய மதிப்பிலிருந்து துளிக்கூடக் குறையும்படி எதுவும் பேசக் கூடாது. இப்படியே இவளது மதிப்பில் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே போய், அது முடிவில் பிரிக்க முடியாத நித்தியமான காதலாக மாறி...

“அதெல்லாம் இல்லை. ஏதோ எனக்குச் சின்ன வயதிலிருந்தே படிப்பிலும் ஆராய்ச்சியிலும் அப்படி ஓர் ஆசை. இதுவரை எட்டிப் பார்த்தது ஏதோ கொஞ்சம்தான். இன்னும் எத்தனையோ இருக்கின்றன.”



# செயற்கைப் பற்களுக்கு ஸ்டெரெடண்ட் அளிக்கும் கவனமான பாதுகாப்பு தேவை

இயற்கைப் பற்களைவிட செயற்கைப் பற்கள் அடிக்கடி சுத்தம் செய்யப்பட வேண்டியது அவசியம். அப்போதுதான் அவை சுத்தமாகவும், நன்ருகவும், பளிச்செனவும் இருக்கும்! ஸ்டெரெடண்டில் பிராண வாயுவின் சுத்தப்படுத்தும் செயல்முறை சேர்ந்திருக்கிறது. ஆகவே அது ஒவ்வொரு பல் இடுக்கிலும் புகுந்து உணவுத் துணுக்குகளை வெளியேற்றுகிறது; அருவருப்பூட்டும் கறைகளை அகற்றுகிறது; நோய்க்கிருமிகளை அறவே அழித்தொழிப்பதுடன் கெட்ட நாற்றத்தையும் கட்டோடு போக்குகிறது.




பிராண வாயு சேர்ந்த

## ஸ்டெரெடண்ட்

மூலம் உங்கள் செயற்கைப் பற்களை சுத்தமாகவும், வெண்மையாகவும், ஆரோக்கியமாகவும் வைத்திருங்கள்.



அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
41, சௌரங்கி ரோட், கல்கத்தா-16.

உலகெங்கும்
ஏற்கப்படுகின்றன!




விசிறிகள்



ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.
கல்கத்தா - 54

ASP/OGI-AMS.




''ஆ! நீங்கள் மிக அடக்கமாகச் சொல்கிறீர்கள். உங்கள் சாதனைகள் மகத்தானவை. அற்புதமான புதிய உண்மைகளை நீங்கள் நிலைநாட்டியிருக்கிறீர்கள். பார்த்தீர்களா? உங்கள் முன்னால் நான் என்னையே மறந்து போனேன். இன்னமும் என் பெயரைக் கூடச் சொல்லவில்லையே? என் பெயர் வனிதா. இன்னமும் குமாரிதான். பி. ஏ. எழுதினேன். என்னமோ படிப்பில் அதிகமாக மனம் ஓடவில்லை. என் அக்காவுக்கு மட்டும் சதா படிப்பிலேயே வெறி. சிறு சின்னக் காகிதம் ஏதாவது கிடந்தால்கூட எழுத்து விடாமல் அதைப் படித்துவிடுவாள். நானும் அவளும்தான் உங்கள் ஆராய்ச்சி முடிவுகளைப் பற்றி — பழைய புதிய இலக்கியங்களுக்கு நீங்கள் காட்டும் விமர்சனங்களையெல்லாம் விவாதிப்போம்...''

''அப்படியா?''

''ஆமாம்! என்னுடைய அக்காகூட ஒரு சமயம் உங்களைப் பற்றி...''

''இருக்கட்டும். என்னைப் பற்றியே பேசிக் கொண்டு போகிறீர்களே? உங்களைப் பற்றி....''

''சரி, அதையும் சொல்கிறேனே! என்னைப் பாருங்களேன். எனக்கு என்ன வயதிருக்கும்?''

''இருபத்தி....''

''பார்த்தீர்களா? இருபத்தி ஒன்று இல்லை, இரண்டு என்று சொல்வீர்கள். உண்மையில் எனக்கு முப்பது முடிந்து விட்டது.''

'ஆ!' வென்று அவளை நன்றாகப் பார்த்தார் சிதம்பரேசன். உண்மையாகவே இருக்கலாம். வனிதா இருபத்தோரு வயதுப் பெண்ணின் இளமையோடுதான் அவருக்குத் தோன்றினாள். ஜாதகப்படி இவளுக்கு முப்பதுதான் ஆகட்டுமே! எனக்கு இவள் பத்தொன்பது வயது யுவதிதான்.

''மணி ஐந்தரையாகி விட்டது. வாருங்களேன், ஏதாவது படத்துக்குப் போகலாம்!'' என்று எழுந்தாள் வனிதா.

பின்னாலேயே துள்ளிக் கொண்டு பாய்ந்த மனத்தை வெட்டி வீழ்த்தார் சிதம்பரேசன். முதல் நாளே படம் பார்க்கப் புறப்பட்டு விட்டால் அத்தனை மதிப்பையும் கீழே தள்ளி விடுவாளே! அப்புறம்...அப்புறம்...

''மன்னிக்க வேண்டும்!''

''சரி. நான் வருகிறேன். உங்களிடம் பேசினதில் மிக்க மகிழ்ச்சி. இனிமேல் அடிக்கடி சந்திப்போம். எதிர் வீடுதானே? நீங்களும் வாருங்களேன் என் வீட்டுக்கு.''

வனிதா விடைபெற்றுக் கொண்டாள்.

பிறகு தினம் பத்து நிமிடங்களாவது அவர்கள் பேசாமல் இருந்ததில்லை. அவருடைய மேதைமையைப் பற்றி மட்டும் அவள் அதிகமாகப் பேசி, சந்திப்பின் பெரும் பகுதி நேரத்தை விணடித்தது சிதம்பரேசனுக்குப் பிடிக்கவில்லை. என்ன செய்வது?

ஒரு நாள் அவருடைய அறையில் புத்தக அலமாரியில் அவள் ஏதேதோ புத்தகங்களைக் குடைந்தாள். பெரிய தலையணைப் புத்தகம் ஒன்று வனிதாவின் பிடியிலிருந்து நழுவியது. அத்தனை பெரிய பொருள் அவள் கால் மீது விழுந்தால்?

சிதம்பரேசன் தாவிச் சென்று அந்தப் புத்தகத்தைப் பிடித்துக் கொண்டார். அந்தப் பிடிக்குள் வனிதாவின் மெல்லிய விரல்கள் நிறைந்த கைகளும் அகப்பட்டுக்கொண்டன.

பிடியை விடவே மனமில்லை அவருக்கு.

அந்தப் பட்டு விரல்களை அப்படியே அள்ளி யெடுத்து....

ஊஹூம்! எல்லாம் சரிந்து தரை மட்டமாகிவிடும். வனிதா அவரை ஆயிரத்தோடு ஆயிரத்தொன்றாக எண்ணி ஒதுக்கிவிடுவாள்.

சிதம்பரேசன் புத்தகத்தை மட்டும் அதன் இடத்தில் வைத்துவிட்டு, ஒன்றுமே நடக்காதது போன்ற உணர்வைச் சிரமத்துடன் வரவழைத்துக் கொண்டு திரும்பினார். அப்புறம் அரை. மணி நேரம் வனிதாவுடன் 'வறட்சியான' விஷயங்களையே பேசினார்.

போகும்போது வனிதாவின் முகத்தில் எல்லையற்ற ஆச்சரியம் பரவி யிருக்கக் கண்டார்.

ஆச்சரியப்படட்டும்! அவளுடைய மதிப்பில் அவர் உயர்ந்து கொண்டிருக்கிறார்!

சில நாட்களுக்குப் பிறகு...

வனிதாவுடன் உலாவப் போனார் சிதம்பரேசன். பேச்சு எங்கெல்லாமோ நடை போட்டுவிட்டுக் காதல், கல்யாணம் என்கிற பாதையை நோக்கி வந்தது.

வனிதாவேதான் அந்த வழிக்குப் பேச்சை இழுத்தாள்.

''தூய காதலில் உங்களுக்கு நம்பிக்கை உண்டல்லவா? அதாவது ஒருவருடைய மேதையைக் கண்டு ஒருத்தி தன்னுடைய உள்ளத்தைப் பறி கொடுப்பது...''

''நம்பிக்கை மட்டுமா? அப்படிப்பட்ட காதலை நான் வரவேற்கிறேன். சாதாரண



## ஓயா விரதர்

அவர் ஒரு புகழ் பெற்ற கைராசி டாக்டர். ஆனால் டாக்டர் என்பதால் வயோதிகம் அண்டாமல் இருக்குமா? வயோதிகத்தின் காரணமாக ஏற்பட்ட உடல் நலக் குறைவு அவரைப் படுக்கையில் தள்ளிவிட்டது.

படுக்கையிலிருந்தாலும் சரி என்று வியாதியஸ்தர்கள் அந்தக் கைராசி டாக்டரிடம் யோசனை கேட்க வந்துகொண்டிருந்தார்கள். டாக்டரும் தம்மை மறந்து வந்தவர்களைக் கவனித்தார்.

டாக்டரின் உறவினர்களுக்கு இது மிகுந்த மனவேதனையை அளித்தது. ஓய்வில் இருக்க வேண்டியவர் இப்படித் தம் உடம்பை அலட்டிக் கொள்கிறாரே என்ற வேதனைதான். டாக்டருக்கு டாக்டராகப் பணியாற்றும் குடும்ப டாக்டருக்கு போன் செய்து அவரை உடனே வந்து பெரியவரிடம் ஓய்வை வற்புறுத்தும்படி கேட்டுக் கொண்டார்கள் அவர்கள்.

குடும்ப டாக்டரும் உடனே வந்தார். பெரியவரின் முன் போய் நின்றார். முன்னவர் வந்து நிற்பதன் நோக்கம் பின்னவருக்குத் தெரிந்து விட்டது.

''வாருங்கள் டாக்டர், உட்காருங்கள். நீங்கள் சும்மா வந்து என் பக்கத்தில் நிற்பதே எனக்கு எவ்வளவு தெம்பை அளிக்கிறது தெரியுமா? இத்தனைக்கும் நீங்கள் எனக்கு ஒரு மருந்தும் கொடுக்கவில்லை இப்போது. ஒரு டாக்டருக்கே இத்தகைய தெம்பு உணர்ச்சி தோன்றுமானால் சாதாரண ஜனங்களுக்கு எத்தனை பெரிய அளவில் இந்த உணர்ச்சி தோன்றக்கூடும்? நானோ இன்னும் அதிக நாட்கள் வாழப் போவதில்லை. அதுவரையில் என்னிடம் வருபவர்களுக்கு என்னால் இயன்றவரை உற்சாகம் அளிக்கவே விரும்புகிறேன். எனக்கு ஓய்வு முக்கியமில்லை'' என்றார் பெரியவர்.

தம்மை மறந்து அப்படி மனிதாபிமானம் பெற்றுச் சேவை செய்த மருத்துவ மேதை யார் தெரியுமா?...... டாக்டர் எம். ஆர். குருஸ்வாமி முதலியார்தான்.

ஆதாரம் : சென்னை மருத்துவக் கல்லூரி சஞ்சிகையில் வெளியான டாக்டர் ரத்னவேலு சுப்பிரமணியத்தின் கட்டுரை.

மாக நமது நாட்டில் அருமாதிரி நடப்பதில்லை தான். எனக்கு என்னவோ அந்த அசாதாரண வாழ்வுதான் லட்சியம்!''

''நான் நினைத்தபடியேதான் நீங்களும் பேசுகிறீர்கள். தூய காதலில் அற்பத்தனமான வயது வித்தியாசம், உருவ ஒற்றுமை இதைப் பற்றியெல்லாம் சிந்திக்கவே இடமில்லையே!''

சிதம்பரேசன் தம் செவிகளில் பாய்ந்த தேன் துளிகளை உள்ளத்தால் பருகினர். அவருக்கும் வனிதாவுக்கும் பதினைந்து வயது வித்தியாசம். இருக்கட்டுமே! அவள் இளமையில் மலர்ந்து குலுங்குகிறவள். அவருக்கு முன் தலை முழுவதும் வழுக்கையின் ஆட்சி! இருக்கட்டுமே! வனிதா இதோ அவருடைய இதயத்தோடு நெருங்கி வந்து விட்டாள்....

அவர் நெட்டுயிர்த்தார். அவள் மேலே அதிகம் பேசாமல் மௌனத்தில் ஆழ்ந்து போய் விட்டாள்.

அடுத்த வாரம்.

சிதம்பரேசனின் அறைக்குள் துள்ளிக் குதித்துக் கொண்டு நுழைந்தாள் வனிதா. அவள் வருகையைக் கண்டதும் திருமண நாளையேகூட அவளாகவே நிர்மானித்துக் கொண்டு வந்திருப்பாளோ என்று தோன்றியது சிதம்பரேசனுக்கு.

''அடுத்த பதினைந்தாம் தேதி அருமையான நாள்!'' என்றாள் வனிதா.

சிதம்பரேசனின் உயிரோட்டம் சில விநாடிகள் நின்று, அவர் மீண்டும் பிறந்து உயிர் பெற்று எழுந்தார்.

''அருமையான நாள்தான்!'' என்று ஆமோதித்தார் அவர்.

''நீங்கள் சரியென்று சொன்னால் போதும். இரண்டு கல்யாணங்களையும் ஒன்றாகவே வைத்துக் கொண்டு விடுவோம்.''

''இரண்டு கல்யாணங்களா?''

''ஆமாம்! ஒன்று எனக்கும் ராம்குமார் என்று எங்கள் அலுவலகத்தில் வேலை பார்க்கிறவருக்கும். எனக்கு அவரை ரொம்பவும் பிடித்து விட்டது.''

சிதம்பரேசன் நாற்காலியில் சாய்ந்து கொண்டார்.

''மற்றொன்று உங்களுக்கும் என் அக்காவுக்கும். அக்காவுக்கு நான் அடிக்கடி உங்களைப் பற்றிக் கடிதம் எழுதினேனே? அவள் மனத்தில் நீங்கள் மிக உயர்ந்த இடம் பெற்று விட்டீர்கள். அவளும் உங்களைப் போலவேதான் ஆராய்ச்சி அது இது என்றால் உயிர். உடல், வயது, தோற்றம் எல்லாவற்றையும் கடந்த ஒப்பற்ற காதலை உபாசிக்கிறவள். உங்கள் பேரில் அப்படிப் பட்ட காதல் கொண்டுவிட்டுத்தான் இத்தனை வயதுக்கு மேல் — நாற்பது வயதில் — கல்யாணத்தைப் பற்றியே நினைத்திருக்கிறாள். என்ன சொல்கிறீர்கள்?''

சிதம்பரேசன் எதுவுமே சொல்லும் நிலையில் இல்லை. அவருடைய கைமட்டும் முன் வழுக்கையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

“நாம் இரண்டு பேரும் திருநெல்வேலியிலிருந்து ஒரே ரயிலில் ஏறி வந்திருக்கிறோம். ஒருவரையொருவர் பார்க்கச் சந்தர்ப்பம் ஏற்படவில்லையே? இங்கே டாக்ஸி க்யூவில்தானே சந்திக்கிறோம்'' என்றான் வசந்தன்.

''கியூவுக்கும் நமக்கும் ரொம்ப ராசி போலிருக்கிறது'' என்று மாதங்கி சிரித்துக் கொண்டே கூறினாள்.

அவர்கள் இருவரும் எழும்பூர் ரயில்வே ஸ்டேஷன் வாசலில் தங்கள் பெட்டி படுக்கைகளுடன் ஓர் ஓரமாக நின்று கொண்டிருந்தார்கள். ஒரு போலீஸ்காரர் கியூ வரிசையில் நின்றிருந்தவர்களை ஒவ்வொரு டாக்ஸி வந்ததும் ஏறச் சொல்லிக் கொண்டிருந்தார்.

''இன்றைக்கு முகூர்த்த நாளாம். அதான் ஏகக் கூட்டம். டாக்ஸி இப்போதைக்குக் கிடைக்காது போலிருக்கிறது. இப்படியே பெட்டி மேல் உட்கார்ந்து கொள்வோம்'' என்று வசந்தன் கூறவே மாதங்கி அப்படியே செய்தாள்.

வசந்தனும் தன் பெட்டியின் மீது உட்கார்ந்து கொண்டு அவளைப் பார்த்து ஏதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் வார்த்தைகள் வரவில்லை. அவன் தயக்கத்தைக் கவனித்த மாதங்கி புன்னகை புரிந்தாள்.

''உங்கள் முகத்தைப் பார்த்தால் நந்தினியைப் பற்றிப் பாக்கியையும் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறாற் போலிருக்கிறது. காலை வேளையில் கதை சொல்லச் சொல்வானேன் என்று தயங்குகிறீர்கள் போலிருக்கிறது. ஆனால் பொழுது போக வேண்டுமே? சொல்கிறேனே!'' என்று மாதங்கி தானாகவே பாக்கிக் கதையைச் சொல்லலானாள்.

''நந்தினி மயக்கமாய்க் கீழே விழுந்திருந்தாளா! அதைக் கண்டு அவள் அப்பா பீதாம்பரமும், அம்மா சாவித்திரியும் தவித்துப் போனார்கள். பக்கத்துப் பங்களாவில் ஒரு டாக்டர் இருக்கிறார் என்று அவளைப் பெண் பார்க்க வந்திருந்த சீதாபதிக்குத் தெரியும். அவன் உடனே அவரை அழைத்து வந்தான். அவர் அவளைச் சோதித்துப் பார்த்துவிட்டு, ''பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஏதோ மன அதிர்ச்சி. அவ்வளவுதான். தூங்கினால் சரியாய்ப் போய்விடும்!''



# கல்யாண மண்டபம்

என்று கூறி மருந்து எழுதிக் கொடுத்துவிட்டுப் போனார். சீதாபதியின் பெற்றோர்கள் 'சகுனம் சரியாயில்லை' என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். பிறகு அவர்கள் புறப்படும் போது, சீதாபதி, நந்தினி படுத்திருந்த அறைப் பக்கம் சென்றான். அவள் அப்போது புரண்டு படுத்தாள். ''நந்தினி! நான் போய் வருகிறேன்'' என்று அவன் அவளிடம் கூறிவிட்டு வந்தான். அவன் தாயார் ''என்னடா அதற்குள்ளே நந்தினி வேண்டிக் கிடக்கு! இன்னும் பெண் பார்க்கவில்லை!'' என்று அவனைக் கடிந்தாள்.

அன்றிரவு பன்னிரண்டு மணி இருக்கும். நந்தினி கண் விழித்துப் பார்த்தாள். அவள் தந்தை, ''வேங்கடாசலபதி! அவளைக் காப்பாற்று. உனக்குத் தங்க டெலிபோன் செய்து அவள் கையாலேயே உண்டியலில் போடச்



சொல்லிடுங்கள்!'' என்று வேண்டுதலைச் செய்து கொண்டார்.

நந்தினியின் கண்கள் மூடின. சில நிமிஷங்கள் அவள் கண் திறக்கவில்லை. அவள் வாயிலிருந்து ஏதோ வார்த்தைகள் மெதுவாகக் கிளம்பிக் கொண்டிருந்தன. அவள் என்ன சொல்கிறாள் என்று தெரிந்துகொள்ள அவள் பெற்றோர்கள் அவள் உதடுகளையே கவனித்துக் கொண்டிருந்தனர்.

''நான் யார் தெரியுமா?'' என்று உரக்கக் கேட்டுக் கொண்டே எழுந்து உட்கார்ந்தாள். அவள் கண்கள் திறக்கவில்லையே!

''தெரியவில்லையே!'' என்று சாவித்திரி கூறினாள்.

''நான்தான் ஏழுமலையான் தூதா!'' என்று பதில் வந்தது.

பெற்றோர்கள் இருவரும் பயபக்தியுடன் எழுந்து நின்றார்கள்.

''தங்க டெலிபோன் பதினாறு காரட்டா?'' என்று சாமி கேட்டது.

சாமி ஒரு நிமிஷம் யோசனை செய்தது. பிறகு, ''அந்தக் குழந்தை கொஞ்ச நாட்கள் வேலை பார்க்கட்டும். அதன் முதல் சம்பளத்தை என் உண்டியலில் கொண்டு வந்து போடட்டும். அப்புறம் பார்த்துக்கொள்ளலாம்!'' என்று கூறியது. பிறகு நந்தினி பொத்தென்று படுக்கையில் விழுந்தாள்.



''இல்லே. இருபத்திரண்டுக்குள் எப்படியாவது செய்து விடுவோம்'' என்று பீதாம்பரம் தெரிவித்துக் கொண்டார்.

''உன் பெண் கல்யாணத்துக்கு இப்போது என்ன அவசரம்?''

''உத்தரவிடுங்கள். அதன்படி செய்யக் காத்துக்கொண்டிருக்கிறோம்'' என்று பீதாம்பரம் பதில் கூறினார்.

பீதாம்பரம் தெய்வ பக்தி உள்ளவர். அவர் வடக்கு மலையானைப் பிரார்த்தித்துக் கொண்டுதான் வியாபாரம் தொடங்கினார். மாதம் தவறாமல் ஒரு சனிக்கிழமையாவது திருப்பதிக்குச் சென்று உண்டியலில் ஏதாவது பணம் போட்டு வருவார். கடவுளே தம் பெண் மூலமாகத் தோன்றி உத்தரவிட்டுச் சென்றதில் அவர் மகிழ்ச்சி அடைந்திருந்தார்.

வளரும் உங்கள்
குழந்தைகளுக்கு



# காமதேனு வனஸ்பதி

(வைடமின் A, D கலந்தது)



மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா.
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

CRITERION.MC-336



# இவர்களுடைய வளமான வருங்காலம் இப்பொழுதே திட்டமிடப்படுகிறது

இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் ரெக்கரிங் டிபாஸிட் திட்டத்தின் சேமிப்பைக்கொண்டு.

குறைந்த பட்சம் ரூ. 5/-லிருந்து அதிக பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதிமாதம் டிபாஸிட் செய்யும் தொகையான:

| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- | ரூ. 500/- |
|---|---|---|---|---|---|
| கீழ்க்கண்டபடி பெருகும்: | | | | | |
| 12 மாதங்களில் | ரூ. 61.00 | ரூ. 122 | ரூ. 610 | ரூ. 1,220 | ரூ. 6,100 |
| 24 மாதங்களில் | ,, 124.50 | ,, 249 | ,, 1,245 | ,, 2,490 | ,, 12,450 |
| 36 மாதங்களில் | ,, 192.00 | ,, 384 | ,, 1,920 | ,, 3,840 | ,, 19,200 |
| 48 மாதங்களில் | ,, 262.00 | ,, 524 | ,, 2,620 | ,, 5,240 | ,, 26,200 |

## இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிட்.

தலைமைக் காரியாலயம்: 151, மவுண்ட் ரோட், சென்னை-2

உங்களுக்கு சேவை செய்வதற்காக 100 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் இந்தியாவின் முக்கிய இடங்களில். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 60 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் உள்ளது.

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்



தொல்லை
பல் முளைக்கும்போதா?
காற்று பிரியும்போதா?
வயிற்றுவலியாலா?



# மானேர்ஸ்
# கிரைப் மிக்ஸ்சர்

## கொடுத்து மீண்டும் புன்னகை தோன்றக் காணுங்கள்

இக்காலத் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் தருகின்றனர். அது இனிய சுவையுள்ளது; சுகாதார முறைப்படி "பேக்" செய்யப்பட்டுள்ளது.

அதிர்ஷ்டக் குழந்தைகளுக்கு மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கிடைக்கிறது



இப்பொழுது
அழகான, புதிய சிவப்பு சீல் நிறங்களில் "பேக்" செய்யப்பட்டு கிடைக்கிறது

ஒரு பயல் என் கண்ணில் அகப்பட வேண்டுமே! ஆனால் அவர்களின் பெயர்கள் எல்லாம் என் காதில் விழுந்தொடவில்லை. எப்போது தெரியுமா? எனக்கு மௌனம் இராக்கியும் அதிகமானபோதுதான்! பாவிப் பயல்கள் நான் தனிகாசலத்தின் வீட்டைக் காலி பண்ணப் போகிறேன் என்பதைத்தான் யார் யாரிடமோ சொன்னார்களே தவிர எனக்கு ஒரு மாற்றுப் போர்ஷன் தேவை என்று யாரிடமும் சொல்லி விசாரித்ததாகத் தெரியவில்லையே!

“நமஸ்காரம்! சாவகாசமாக இருக்காப் போலிருக்கு!” என்று கூழைக்கும்பிடு போட்டுக் கொண்டு உள்ளே வருபவர் சர்வ உரிமையுடன் ஒரு டில்லி மோடாவை இழுத்துப் போட்டு அமர்ந்து, “என்



சார்! நீங்க இந்த இடத்தைக் காலி பண்ணப் போகிறீர்களாமே! இதற்கு எவ்வளவு வாடகை கொடுக்கிறீர்கள்? ரூபாய் ஒரு இஞ்சா ஒண்ணரையா?” என்று கேட்பார். அவர் பார்வை கூடத்திலிருக்கும் என்னுடைய அத்தனை உடைமைகள் மீதும் விழுந்து தாவும்.

“ஸ்வாமி! இந்த போர்ஷன் வாடகைக்கு உமக்குக் கிடைக்காது. வீட்டுச் சொந்தக்காரர் இங்கே வரப் போகிறார். மாடி காலியாகப் போகிறது. போய் விசாரியும்” என்பேன். அவர் கீழ் உதடு புதிய பங்களாக்களில் நீட்டிக் கொண்டிருக்கும் பால்கனி போல் பிதுங்கும். “என் மனைவிக்கு மாடிப்படி ஏறி இறங்க முடியாதே” என்று கிளம்புவார்.

ஒரு நாள் இள வயது தம்பதிகள் ஜோடியாக வந்தார்கள். அவர்கள் யார் என்று எனக்குத் தெரியாது. ஏதாவது விசேஷங்களுக்கு அழைக்க வந்த பக்கத்துத் தெரு அன்பர்களாக இருக்கும் என்று நினைத்தேன். இளைஞன் 'வணக்கம் சார்' என்று ஒரு நாமக் கும்பிடு போடக் கைகளை உயர்த்திவிட்டு, அந்தக் கணத்திலேயே நான் ஒருவன் குத்துக்கல் போல் உட்கார்ந்திருப்பதை மறந்து விட்டுத் தன் மனைவியைப் பார்த்து, “உள்ளே போய்ப் பார்த்துவிட்டு வாயேன்! இங்கே விறகு உபயோகித்துச் சமையல் செய்யலாம்போலிருக்கிறது! சுவரில் கரி படர்ந்திருக்கிறது பார்” என்றான் என் முதுகுப் பக்கமாக இருந்த சமையல் அறையைப் பார்த்து.

பாவம்! அவர்கள் இப்போது இருக்கும் வீட்டின் சொந்தக்காரர் விறகுக்குப் பரம விரோதி போலும்! ஒருவேளை விறகு 'அலெர்ஜி'யாகவும் இருக்கலாம்! இந்தத் தம்பதிகளின் காசு நிலை கரி விலைக்குக் கட்டுப்படியாகவில்லையோ என்னவோ? அந்த ஆர்வத்தில் நான் ஒருவன் குடும்பத்துடன் காலி பண்ணாமல் இருப்பதைக்கூடப் பொருட்படுத்தாமல் அவர்கள் அடுப்பங்கரை ஆராய்ச்சியில் ஈடுபட்டுவிட்டார்கள். நல்ல வேளை! வரும் வழியில் கட்டைத் தொட்டியில் கால் குண்டு விறகை வாங்கிக் கையில் எடுத்துக் கொண்டு வந்து, 'உங்கள் வீட்டு அடுப்பங்கரையில் சமைத்துச் சாப்பிட்டுவிட்டுப் போகிறோம்' என்று சொல்லாமல் இருந்தார்களே!

அந்த யுவதியை வரவேற்கும்படி என் மனைவிக்குச் சமிக்ஞை செய்துவிட்டு அந்த இளைஞனை உட்காரச் சொன்னேன்.

“இங்கே எந்த விதத் தடை உத்தரவும் விறகு இறக்குமதிக்கு இல்லை! எங்கள் வீட்டில் மாதம் பத்துக் குண்டு வாங்குகிறோம்” என்று குரலை வெகு இயற்கையாக வைத்துக்கொண்டு அன்யோன்ய பாவத்துடன் அவரிடம் நான் பேச ஆரம்பித்தேன்.

ஆஹா! என்ன அற்புதமாகத்தான் அந்த இளைஞனின் முகம் மலர்ந்தது. விறகுக்கு இப்படி ஒரு மலர்ச்சி ஏற்படுத்தக்கூடிய சக்தி இருக்கிறது என்று அப்போதுதான் உணர்ந்தேன்! இந்தச் சின்ன விஷயம் அந்தக் காலத்துப் புலவர்களுக்கெல்லாம் தெரியாமல் போயிற்றே! எத்தனை காவியங்களில் தலைவியையோ தலைவனையோ உசிதம் போல் அப்புறப்படுத்திவிட்டுத் தடியான விறகுக் கட்டையைக் கொண்டு நிறுத்தியிருப்பார்கள்?

“அப்படியா சார்! ரொம்ப சந்தோஷம்! நீங்க என்னிக்குக் காலி செய்யப் போகிறீர்கள்?” என்று கேட்டான் அவன் அபரிமிதமான உற்சாகத்துடன்.

“ஹூம்! அதுதான் எனக்கும் தெரியவில்லை! நான் இன்னும் புது ஜாகை தேடும் முயற்சியில் தீவிரமாக இறங்கவில்லை. உங்களுக்குத் தெரிந்த இடம் ஏதாவது இருந்தால் சொல்லுங்களேன்!” என்றேன்.

அவ்வளவுதான்! அந்த விறகு அன்பர் விருட்டென்று எழுந்தார். மனைவியைப் பார்த்துத் தலையை அசைத்தார். இருவரும் சம்பிரதாயத்துக்காகவும் உத்தரவு வாங்கிக் கொள்ளாமல் வந்த வழியே திரும்பினார்கள்.

“சார்! என்னை உங்களுக்குத் தெரியாது! ஆனால் உங்களை எனக்கு ரொம்ப நாட்களாக ரொம்ப நன்றாகத் தெரியும். மயிலாப்பூர் நடுத் தெரு தியாகராஜனோட மருமானுக்கு ஷட்டகன் நான்! தியாகராஜன் அடிக்கடி உங்களைப் பற்றிச் சொல்வார்” என்று ஆரம்பித்துத் திடீரென்று குரலை மதுரை மணி ஐயர் ஸ்வரம் பாடுவது போல் குறைத்துக்கொண்டு “நீங்க இந்த வீட்டைக் காலி பண்ணப் போவதாகக் கேள்விப்பட்டேன்! வெளியிலே நீங்க மூச்சு விட வேண்டாம். நாலு நாளைக்கு முன்னாலே குழந்தைகளுடன் 'கெஸ்ட்' மாதிரி வந்துடறேன். அப்புறம் நீங்க சொன்னா வீட்டுக்காரன் எதிர்க்கவா போறான்?” என்று ஆரம்பித்தார், நான் முதல் தடவையாகப் பார்க்கும் ஒரு ஆசாமி. மயிலாப்பூர் தியாகராஜன் யார் என்றுநான் மனத்தைக் குடைந்து கொள்ளத் தயாராயில்லை.

# புது டயரா? அல்லது புதுப்பித்த டயரா?

## வேற்றுமை காண்பது கடினம்

உங்களுடைய கார் டயர்களை ரீடிரெட் செய்து, எவ்வளவு காலம் உபயோகிக்கலாமோ, அவ்வளவு காலம் உபயோகிக்கவே விரும்புவீர்கள். செலவு மிச்சம் ஒரு புறம்; தோற்றத்திலும் கவர்ச்சியாக இருக்கும் டிவிஎஸ் ரீடிரெட். ஏனென்றால், பயிற்சி பெற்ற நபர்கள் டிவிஎஸ் ஸ்தாபனத்தில் பணியாற்றுகிறார்கள் அவர்கள் உழைப்பு, உங்கள் சேவைக்கு.

டிவிஎஸ் — ரீடிரெடிங் செய்வதில்
இந்தியாவிலேயே மிகப்பெரிய ஸ்தாபனம்

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**




(டிவிஎஸ் ஸ்தாபனம்) பங்களூர், கோயமுத்தூர், சென்னை புதுக்கோட்டை
செகந்திராபாத், திருநெல்வேலி



''குழந்தை முகத்திலே பால் வடியறதடி!''

''ஆமாம் அம்மா! அப்பா வந்து பேஸ் பவுடருக்குப் பதிலாகப் பால் பவுடரை குழந்தை முகத்தில் பூசிட்டாரம்மா!''

''ஆஹா! திவ்வியமான யோசனை! இப்போ பட்டிணத்திலே பல பேர் இப்படித்தான் பண்ணுகிறார்கள்! முன்னே பின்னே தெரியாதவர்கள் எல்லோரையும் மாமா, மச்சினன் என்று சொல்லிக்கொண்டு வந்து உட்கார்ந்து விடுகிறார்கள். நீங்களோ நம்ப தியாகராஜனுக்கு ரொம்ப வேண்டியவர் என்கிறீர்கள். ஆகவே நீங்களும் எனக்கு வேண்டியவராகி விட்டீர்! நீரோ இப்போது இருக்கிற வீட்டைக் காலி பண்றது என்று தீர்மானம் பண்ணி விட்டீர்! ஓர் உதவி பண்ணனும்.'' நான் வேண்டுமென்றே திருத்தி அவர் முகத்தைப் பார்த்தேன்.

''சொல்லுங்கோ! காத்துண்டிருக்கேன்! என்ன பண்ணனும்?'' என்று பேச்சிலேயே பாய்ச்சல் காட்டினார் வந்தவர்.

''வேறொன்றும் இல்லை! இப்போ நீங்கள் காலி பண்ணப் போகும் வீட்டுக்கு நான் வந்து உட்கார்ந்து கொள்கிறேன். ஏனென்றால் இங்கே இவ்விடத்துக்கு 'ஹௌஸ் ஓனர்' வந்து உட்காரப் போகிறார். நீர் மாடிக்கு வேண்டுமானால் வரலாம்! அதிகமாகப் போனால் நூற்றைம்பது ரூபாய் கேட்பார்! வருகிறீரா?'' என்றேன்.

அணி ஏறிப் பஞ்சராகப் போகும் சைக்கிள் டயர் போல் அவர் முகமும் உற்சாகம் குன்றிச் சப்பிப் போயிற்று. ''நீர் யமன்'' என்ற பட்டத்தைக் கொடுத்துவிட்டு வந்த சுவடு தெரியாமல் கிளம்பினார்.

இந்த ரீதியில் என் 'போர்ஷனை'ச் சாக்கிட்டு என்னைப் பேட்டி காண க்யூவில் நின்று போனோர் அநேகர்.

ஓர் அன்பர் ஏற இறங்கப் பார்த்துக் கொண்டு உள்ளே வந்தார். ''என் ஐயா! இந்த வீட்டை விற்கப் போகிறீர்களா? நீங்கள் எங்கோ வேறு பேட்டையில் வீடு கட்டிக்கொண்டு போகப் போகிறீர்களாமே? காதில் விழுந்தது'' என்று ஆரம்பித்தார்.

ஆஹா! என் உள்ளம் உவகையால் பூரித்தது. என்னையும் ஒரு வீட்டுக்காரராக நினைத்து மதிப்புக் கொடுக்கிறாரே! அந்தப் பெருமை சாதாரணமாகக் கிடைக்கக் கூடியதா என்ன? சில வினாடிகள் அந்த இன்ப எண்ணத்தில் மிதந்துவிட்டு, வந்தவரைப் பார்த்து, ''உஷ்! இரைந்து பேசாதீர்! பாரிஸ் நகரத்தின் உன்னத எஃபில் கோபுரத்தையும் நியூயார்க் நகர துறைமுகத்தில் உள்ள சுதந்திர தேவியின் சிலையையும் விற்க முயன்றவர் கோஷ்டியில் என்னைச் சேர்த்துவிடாதீர். இந்த வீட்டின் நூறு சத சொந்தக்காரர் மாடியில் இருக்கும் தனிகாசலம். நான் ஒரு சாதாரணக் குடித்தனக்காரன்! அவர் சௌகரியத்துக்கு நான் இடம் மாறப் போகிறேன். அவ்வளவுதான்!'' என்றேன். வந்தவர் சுவாரசியம் குன்றி விடை பெற்றார்.

மன்மதன் எரித்த கட்சி எரியாத கட்சி என்று பிரிந்து நிற்பது போல் எனக்கு அறிமுகமானவர்கள், பார்வையினால் மாத்திரம் பழக்கப்பட்டவர்கள், வாடிக்கைக் காய்கறிக்காரன், பழைய பேப்பர்க்காரன் எல்லோரும் இரண்டு பிரிவாகப் பிரிந்து நின்றார்கள்.

''அதெப்படி பத்து வருடங்களாக இருந்தவரைத் திடீரென்று போகச் சொல்ல முடியும்? நீங்க ஒரு கை பாருங்க சார்! வீட்டுக்காரன் முறைப்படி நோட்டீஸ் கொடுத்தானா? எல்லாம் வாடகையை உயர்த்த ஒரு ஹம்பக்'' என்று கோஷமிட்டது ஒரு பிரிவு. இதில் அநேகர் பல இடங்களுக்கு ஜாகை மாறி வெவ்வேறு மூலைகளில் வீட்டுச் சொந்தக்காரர்களுடன் போராடி அனுபவம் பெற்றவர்களாக இருக்கலாம்!

மற்றொரு சாரார் ''வீட்டு ஓனர் இடம் வேணும் என்று கேட்டால் காலி பண்ண வேண்டியதுதான். அவருக்கு எவ்வளவு அவசரமோ என்னவோ? வாடகைக்கு இடம் கொடுப்பதற்கு அவர்களுக்கு இந்த நன்றியாவது காட்ட வேண்டாமா?'' என்றனர்.

இவர்களில் சிலராவது மாறி வீட்டுச் சொந்தக்காரர்களாக இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. இல்லாவிடில் இப்படி அநுதாபக் கண்ணீர் அவர்கள் வடிக்க மாட்டார்களே!

நான் போட்டி நாயகனாக மாறி மூன்று மாதங்களுக்கு மேலாகிவிட்டது. என் பையன் வாடகை கொடுக்கப் போன மூன்று சந்தர்ப்பங்களிலும் தனிகாசலம் 'உங்க அப்பா வீடு பார்க்கிறாரா?' 'உங்க அப்பா ஏதாவது வீடு பார்த்தாரா?' 'உங்க அப்பாவுக்கு வீடு பார்க்கும் யோசனை ஏதாவது உண்டா?' என்று முறையாக விரக்தியின் சதவிகிதத்தை ஏற்றிக்கொண்டே கேட்டிருக்கிறார். ஆனால் என் பையன் மாத்திரம் அந்த மூன்று சந்தர்ப்பங்களிலும் ஒரே விதமாக 'எனக்குத் தெரியாது' என்ற பதிலைக் கொடுத்துவிட்டு வந்திருக்கிறான்.

எனக்குத் தெரியும் என் நண்பர்கள் யாரும் இடம் பற்றிய தகவல் கொடுக்க மாட்டார்கள் என்று. நல்ல இடமாகக் காதில் விழுந்திருந்தால் அவர்களுக்கே இடமாற்றச் சபலம் தோன்றுவது இயற்கைதானே! தனக்கு மிஞ்சித்தானே தானமும் தர்மமும்!



## நிராலா

அதிகத் துணிகளை
வெளுக்கிறது!



## நிராலா

துணிகளைப் பிரகாசமாக
வெளுக்கிறது!



## நிராலா

துணிகளை விரைவில்
வெளுக்கிறது!







ASP/N-5

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட்., கர்நூல்.

